# புதிய ரெக்ஸோனா
# உங்கள் சருமத்தைப் பராமரிக்கிறது...

## மெருகு மிளிர வைத்திருக்கிறது.




இப்போது, எழில் கொஞ்சும் புது வடிவிலே, கையடக்கமாக வருகிறது புதிய ரெக்ஸோனா.

சருமப் பராமரிப்புக்கான நாலு இயற்கைத் தைலங்களின் கலவை அதிலுள்ளது: ஹூபுஷா (தேவதாரம்), கருவா, கிராம்பு, சாளம். மேனி மின்னக் குளித்தெழுவீர்... நீராடிய உங்கள் மீது நேரமெல்லாம் ரெக்ஸோனா மெல்லொளி மெருகு, நாளெல்லாம் ரெக்ஸோனா நறுமண உறவு. குளித்துப் பாருங்கள் இன்றே.

**புதிய ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு நல்லது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்–RX.21-103 TM

# முதல் பக்கம்




# மொழி வெறுப்பு - விழி இழப்பு

ஏந்த மொழியையும் வெறுப்பதன் மூலம் ஒருவன் தாய் மொழிக்கு நன்மை செய்து விட முடியாது. அது மட்டுமல்ல; அவன் தனக்கே துரோகமும் செய்து கொள்கிறான்.

நான் தமிழ் மட்டுமே படித்தவன்; ஆங்கிலம் தெரியாது. கல்கத்தாவில் இருக்கும்போது படாத பாடு பட்டேன். வங்காளி மொழியில் சில வார்த்தைகளைத் தெரிந்து கொண்டேன். அரைகுறை ஆங்கிலத்தில் பேசிப் பழகினேன். ஒன்றரை வருட காலம் நான் பேசிய ஆங்கிலத்தில் தவறுகள் கண்டபோதெல்லாம் பலபேர் திருத்தினார்கள். மேலும் மேலும் ஆங்கிலத்திலேயே பயிற்சி பெற்றேன்.

என் மூத்த மகன் கண்மணி சுப்பு, பி.யு.சி. யோடு படிப்பை நிறுத்தி விட்டான். அதில் எனக்கு வருத்தம். ஆனால் அவன் தானாகவே மலையாள மொழியைப் படித்து, பயிற்சி பெற்று இப்போது மலையாளக் கதைகளைத் தமிழில் மொழிபெயர்த்துக் கொண்டிருக்கிறான். முதன் முதலாக, மலையாளத்திலிருந்து தமிழாக்கப்படும் ஒரு படத்துக்கு வசனம் எழுதிக் கொண்டிருக்கிறான். இறைவன் அருளால் அந்த முதல் படம் 'ஆதி சங்கரர்' வரலாறு ஆகும்.

வெறுப்பினால் பிற மொழிகளைப் படிக்காது விட்டுவிடுபவன், அற்புதமான கருவூலங்களை இழந்து விடுகிறான்.

வடமொழி, ஆழ்ந்த கருத்துக்கள் நிறைந்த ஒரு பொக்கிஷம். இரண்டு ஆண்டுகளாக நான் வடமொழியில் பயிற்சி பெற்று வருகிறேன். தமிழைப் போலவே 'தோன்றிய காலம்' தெரியாத அந்த மொழியில் எவ்வளவு அற்புதங்கள் நிறைந்திருக்கின்றன! பத்தாண்டுகளுக்கு முன்னாலேயே இந்தப் புத்தி வந்திருந்தால், நானும் ஒரு மேதையாகத் திகழ்ந்திருப்பேன்.

வடமொழியைப் படிக்கும் ஆர்வம் ஏற்பட்டதன் காரணமாக இப்போது பகவத் கீதை விளக்கவுரையைக் கவிதையிலும் உரை நடையிலும் எழுதியுள்ளேன்.

பஜகோவிந்தத்தில் வரும் முப்பத்தொரு பாடல்களையும் விவேக சிந்தாமணியைப் போல் சந்தக் கவிகளாக்கியுள்ளேன்.

இந்தச் 'சுயபுராணம்' எதற்கு என்றால் பல மொழி கற்பதில் உள்ள சுகத்தைச் சொல்லவே! தமிழ் மாணவர்களுக்கு ஆங்கிலப் பயிற்சி இருக்கிறது. அவர்களுக்கு வடமொழிப் பயிற்சியும் இருக்குமானால் மற்றவர்களைத் திகைக்க வைக்கலாம்; சபையில் நிமிர்ந்து நிற்கலாம். எழுத்தையே தொழிலாகக் கொள்ள முடியுமானால், உட்கார்ந்த இடத்திலிருந்தே சம்பாதிக்கலாம்.

முட்டாள்தனமாக 'வடமொழி செத்த மொழி' என்று எவனெவனோ சொன்னதைக் கேட்டு நான்தான் காலத்தை வீணாக்கி விட்டேன். இன்றைய இளைஞன் உடனடியாக வடமொழி கற்க வேண்டும். ஆங்கிலம் காப்பாற்றாத அளவுக்கு வடமொழி காப்பாற்றும். வடமொழியின் மூலம் சிறந்த எழுத்தாளனாகலாம்; பேச்சாளனாகலாம்; மொழிபெயர்ப்பாளனாகலாம்.

தமிழின் பெயரால் கூப்பாடு போடுவது அரசியல். தமிழ் நம் உயிர்; அதுபோல் வடமொழி நமது ஆத்மா.

வெறும் பட்டப் படிப்பு படித்தவனுக்கெல்லாம் கிடைக்காத வாய்ப்பு மொழிப் பயிற்சி பெற்றவர்களுக்கே கிடைக்கும்.

ஆண்டவன் எனக்கு, இன்னும் பத்தாண்டுகள் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் கொடுப்பானேயானால், ஆங்கிலத்தில் ஒரு சிறு காவியமும், வடமொழியில் ஒரு சிறு காவியமும் எழுதுவேன்.

இதோ எனக்குத் தெரிந்த வடமொழியில் நான் எழுதிய ஒரு பாடல்:

அமர ஜீவிதம் சுவாமி அமுத வாசகம்
பதித பாவனம் சுவாமி பக்த சாதகம்
முரளி மோகனம் சுவாமி அசுர மர்த்தனம்
கீத போதகம் ஸ்ரீ கிருஷ்ண மந்திரம்

நளின தெய்வதம் சுவாமி மதன ரூபகம்
நாக நர்த்தனம் சுவாமி மான வஸ்திரம்
பஞ்ச சேவகம் சுவாமி பாஞ்ச சன்னியம்
கீத போதகம் ஸ்ரீ கிருஷ்ண மந்திரம்

ஸந்திய பங்கஜம் சுவாமி அந்திய புஷ்பகம்
சர்வ ரக்ஷகம் சுவாமி தர்ம தத்துவம்
ராத பந்தனம் சுவாமி ராஸ விலகம்
கீத போதகம் ஸ்ரீ கிருஷ்ண மந்திரம்

**கண்ணதாசன்**

# சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் அளிக்கிறது: உங்கள் தேவைக்கேற்ற ரப்பர் வடிவம்.

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸில் நாங்கள் உங்கள் தேவைக்கேற்ப ரப்பரை வார்த்துத் தருவதில் தனித்திறமை பெற்றுள்ளோம். வடிவமைப்பு, குறிப்பிட்ட அளவுகள், எடை மற்றும் உருவம்—உங்கள் தேவைக் கேற்ப இயற்கை மற்றும் செயற்கை ரப்பரைக் கொண்டு உருவாக்கித் தருகின்றோம். மோட்டார் மற்றும் சரக்குத் தொழில், எலக்ட்ரானிக்ஸ் மற்றும் நெசவுத் தொழில், இவ்வாறு பரந்த பல தொழில் களுக்கேற்ப ரப்பரை வார்த்துத் தருகின்றோம்.

தேவைக்கேற்ப வார்க்கிறோம்.

எமது இரு அண்மைக் கால வெற்றிகள்: திருச்சியில் பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸுக்காக ட்ரன்னியன் ஷாஃப்ட் புஷ்ஷிங் ஸஸ்பென்ஷன்கள், பங்களூரில் பாரத் எலக்ட்ரானிக்ஸுக்காக ஷாக் அப்ஸார் பர்கள். அவர்கள் கேட்டுக்கொண்ட அளவுகளுக்கேற்ப மிகவும் நுண்ணிய மாகக் கவனித்து வார்த்துத் தந்துள்ளோம்.

இவை எங்களைப் பொறுத்தவரையில் நீண்ட பட்டியலில் இரு புதிய சேர்க்கை கள்தான்: அதாவது ரப்பர் வார்ப்பில் நாட்டின்சுய தேவை பூர்த்தியாகும்.

எங்கள் பங்கு பல தொழில்களில்

ஒவ்வொரு தொழிலுக்கும் ஏற்ப ரப்பர் வார்ப்பு உறுப்புகள். டெல்கோ, ஸைக்கோ, ப்ரீமியர், அசோக் லேலண்ட் மற்றும் புகழ் பெற்ற உற்பத்தியாளர்களுக்காக தனியே வார்க்கப்படும் உறுப்புகள். ஸைரப்பர் உறுப்புகளைப் பலதரப்பட்ட வாடிக்கை யாளர்கள் விரும்பி வாங்குகின்றனர்.

நீங்கள் விரும்பி வாங்கவேண்டிய புத்தகம்

அது "ஸைரப்பர் — உங்கள் தேவைக் கேற்ப வடிவுகொள்கிறது". ரப்பரைக் கொண்டு நாங்கள் என்ன செய்கிறோம், எவ்வாறு செய்கிறோம் எனக்கூறுவது.

ஒரு வரி எழுதுங்கள். ஒரு பிரதி அனுப்புகிறோம்.

**SIRUBBER**

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
உசிலம்பட்டி ரோடு
கோச்சடை
மதுரை 625 016



SAA/SI/2540



# கல்கி

1977 ஜூன் 5

பிங்கள ௵

வைகாசி 23



ராஜாஜி சிந்தனை

## பண்பாடு

சீலம், திருந்திய உணர்ச்சி, ஆசாரம், கல்வி, கலை, இவையெல்லாம் கூடிப் பண்பாடு என்பது உண்டாகும்.

பண்பாடு இருவழியில் அடைகிறோம். தனி மனிதனுகத் திருத்தப்பட்டு அடைவது ஒரு வழி. மற்றொன்று சமூகத்தில் பரம்பரையாகப் பரவி நிற்கும் பண்பாட்டின் பயனுகத் தனிப் பிரயத்தனமின்றி அனைவரும் அடையும் பண்பாடு.

சில காலமாக நாம் நம்முடைய பண்பாட்டை அசட்டை செய்து விட்டோம். நமது பண்பாடு முறையாக வளர்ந்து வருவது தடைப்பட்டு விட்டது. இதைக் குறித்து இனி வருந்திப் பயனில்லை. நம்மிடம் இப்போதும் வேண்டிய மனத்திண்மை இருக்கிறது. மனிதனின் உடற்கூற்றைப் பொறுத்த வரையில் வேதங்களையும் உபநிஷதங்களையும் கீதையையும் செய்தோருடைய மூளைச் சிறப்பை நாமும் பெற்றுத்தான் இருக்கிறோம். இதை இழந்து விட முடியாது. இது தேக தருமம். பண்டை முன்னோர்களுடைய திறமை நம்மிடத்திலும் பொருந்தியிருக்கிறது. அரசியல் ஆதிக்கமும் அடிமைத் தனமும் அவமானமும் எப்படித்தான் இருக்கட்டும். இருந்தாலும், நாம் சிறிது முயன்றால் நமது பண்பாட்டை மீண்டும் பெற்று விடலாம். பெற்று விட்டால் உலகம் முழுவதும் நம்முடைய தலைமையையே எதிர் நோக்கியிருக்கும் என்பதில் ஐயமில்லை.

—கட்டுரைகள் தொகுதியிலிருந்து

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே


கல்கி சந்தா

| | ஒரு வருடம் ரூ.பை | ஆறு மாதம் ரூ.பை |
|---|---|---|
| இந்தியா | 38.00 | ,19.00 |
| இலங்கை (இலங்கை நாணயப்படி) | 38.00 | 19.00 |
| வெளிநாடுகள் | 90,00 | 45.00 |

தவறு செய்பவர்களின் காதைத் திருகி
கண்டிக்கும் உரிமை மக்களுக்கு உண்டு — மொரார்ஜி














# ஜனநாயகமும் தேர்தல்களும்

க. சந்தானம்

ஜனநாயக ஆட்சி முறையில் தேர்தல்கள் மிகவும் முக்கியமான அங்கம் வகிக்கின்றன. எனினும் தேர்தல்கள் இருப்பதனாலேயே, அவை, நடைபெறுவதனாலேயே, உண்மை ஜனநாயகம் இயங்குகிறது என்று எண்ண வேண்டியதில்லை. அப்படி எண்ணினால், தவறாகக்கூட ஆகும். பாகிஸ்தான் இதற்கு எடுத்துக்காட்டு. ஆகையால் ஜனநாயகத்தின் உண்மை அர்த்தத்தையும், அதை அடையத் தேர்தல்கள் எந்த விதத்தில் உதவக்கூடும் என்பது பற்றியும் மக்களுக்கு அறிவை உண்டாக்க வேண்டியது மிக அவசியமாகும்.

ஜனநாயகச்செயல்முறையில் இரண்டு வகை உண்டு. ஒன்று நேர்முறை; மற்றொன்று பிரதிநிதித்வ முறை. நேர் முறை ஜனநாயகம் மிகச் சிறிய இடங்களில் பொதுமக்களின் கருத்தை மிகக் குறைந்த விஷயங்களில் மட்டும் தெரிந்து கொண்டால் போதும் என்ற பின்னணியில் சுலபமாக இயங்கும். அவ்வப்போது மக்கள் அனைவரும் ஓர் இடத்தில் கூடி, வரி விதிப்புப் போன்ற முக்கியமான விஷயத்தில் முடிவு செய்வர்,

முடிகிறது. இந்த முறை அமெரிக்காவில் செயல்படுகிறது. பார்லிமெண்ட் முறை ஜனநாயகத்தில், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சட்டசபை அங்கத்தினர்களாகிறார்கள். அவர்களுக்குள்ளே பெரும்பான்மை மெஜாரிட்டி பெற்ற கட்சித் தலைவர்கள் அரசை அமைப்பார்கள். இந்த முறை வளைந்து கொடுக்கும் தன்மை யுடையது. இங்கிலாந்தில் இம்முறை முதலில் தோற்றுவிக்கப்பட்டது. உலகத்தில் பல நாடுகள் இந்த முறையைத்தான் பின்பற்றி வருகின்றன. இந்தியாவிலும் இந்த முறைதான் இயங்குகிறது.

பார்லிமெண்ட் முறை ஜனநாயகத்தின் வெற்றி — அதாவது திருப்திகரமான நடைமுறை — பிரதிநிதிகளின் திறமை, நேர்மை, எந்த அளவுக்கு அவர்கள் மக்களின் உண்மைப் பிரதிநிதிகள் என்பனவற்றைப் பொறுத்து இருக்கும். இதனால்தான் சில அரசியல் சிந்தனையாளர்கள் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளுக்குச் சில நல்ல தகுதிகள் (Qualifications) இருத்தல் அவசியம் என்று அபிப்பிராயப்படுகின்றனர்,

கல்கி மலர் 36 இதழ் 45



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

சில சமயம் நீதிமன்றங்களாகக்கூட இப்பொதுக்கூட்டம் செயல்படும். இம்மாதிரி இயங்கிய நேர் முறை ஜனநாயகத்தில்தான் கிரீஸ் நாட்டில் உலக மேதை சோக்ரதருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. இதனாலேயே நேர் முறை ஜனநாயகம் சிறிய முறை, நல்ல முறை அல்ல என்று தெரிகிறது.

பிரதிநிதித்துவ முறை ஜனநாயகத்தில் மக்கள் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கிறார்கள். பிரதிநிதிகள், அரசு அமைக்கின்றனர். அரசு அமைப்பதிலும் இரண்டு முறை உண்டு. ஒன்று ஜனாதிபதி முறை: மற்றொன்று பார்லிமெண்ட் முறை. ஜனாதிபதி முறையில் மக்கள் ஜனாதிபதியையும், சட்டசபைப் பிரதிநிதிகளையும் தனித் தனியே தேர்ந்தெடுக்கின்றனர். இதனால், இருவரும் மக்கள் ஆதரவை நேரடியாகப் பெற்றவர்கள் என்பதால், ஒருவர் மீது மற்றவர்கள் திருப்திகரமாகவே கண்காணிக்க

நடைமுறையில் இதைக் கொண்டு வருவது அவ்வளவாகச் சாத்தியமில்லை. ஏனெனில், படிப்புத் தகுதியோ, செல்வத் தகுதியோ இல்லாமலே பலர் உள்ளூர்களிலும், மாவட்டங்களிலும், மாநிலங்களிலும், அந்தந்த ஆட்சி கேந்திரங்களிலும், தொழிலாளர் யூனியன்களிலும் நீண்ட காலம் பணியாற்றி அநுபவம் உள்ளவர்களாக இருப்பதால் அப்படிப்பட்டவர்கள் நல்ல பிரதிநிதிகளாக இருக்கக் கூடியவர்களே. ஆனாலும் அரசியல் கட்சிகளுக்கு ஒரு கடமை உண்டு. மக்கள் பிரதிநிதிகளாக அவர்கள் நிறுத்தும் வேட்பாளர்கள், நாணயம், நேர்மை, திறமை, கல்வி இவை யெல்லாம் உடையவர்களாக இருக்கும்படி அவர்கள்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். தவிரவும், தேர்தல்கள் நடத்தும் முறையானது, முடிவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மக்களின் உண்மைப் பிரதி

நிதிகள்தானா என்பதை நிர்ணயிக்கும். தேர்தல்களில் தில்லுமுல்லுகள் நடந்தால், பெருவாரி மக்களின் உண்மை ஆதரவு பெறாத தவறான வேட்பாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதாக அறிவித்து விட முடியும். இக்காரணம் பற்றியே தேர்தல்கள் எல்லாம் நேர்மையாக, நியாயமாக (Free and Fair) நடைபெற வேண்டும் என்று அடிக்கடி கோரப்படுகிறது. நமது நாட்டில் 1952 லிருந்து 1971 வரையில் நடைபெற்ற தேர்தல்கள் எல்லாம் பொதுவாக நேர்மையாக, நியாயமாகத்தான் நடைபெற்றன. ஏனெனில் அரசியல் அமைப்பின் திட்டப்படி, ஏற்படுத்தப்பட்ட தேர்தல் கமிஷனின் மேற்பார்வையில் இவை நடைபெறுகின்றன. இது நம்முடைய அதிர்ஷ்டம் என்று சொல்லலாம்.

இப்படியிருந்தும்கூட, அதாவது தேர்தல்கள் நியாயமாக, நேர்மையாக இருப்பினும், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி, தனது தொகுதியில் மிகக் குறைந்த வோட்டுக்கள் பெற்றவராக இருப்பது சாத்தியமே. உதாரணமாக ஒரு தொகுதிக்கு ஐந்து வேட்பாளர்கள் போட்டியிட்டால், தர்க்க ரீதியில் கணக்குப்படி 21 சத வோட்டுப் பெற்றவர் நியாயமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியாக ஆகிவிடலாம். எண்ணிக்கைக் கணக்குப் பார்த்தால் மொத்தத்தில் 25 அல்லது 30 சத வோட்டுக்கள்தான் அவர் பெற்றிருப்பார். அவரைத் தொகுதி மக்களின் உண்மைப் பிரதிநிதி என்று சொல்வது நியாயமாகாது. ஒரு தொகுதிக்கு ஒரு பிரதிநிதி, ஒரு பிரதிநிதிக்கு ஒரு வோட்டு — என்ற இப்போது உள்ள தேர்தல் ஏற்பாட்டில் இது ஒரு குறை. இந்தக் குறை இல்லாது செய்ய வேண்டுமானால் ஒரு மாற்று முறை உண்டு. இதற்கு மாற்றுத் தனி வோட்டு மூலம் விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறை என்று பெயர். (Proportional representation by single transferable votes) இது மிகவும் திருப்திகரமான முறை. இந்த முறையில் ஒவ்வொரு வாக்காளரும் தனது வோட்டை வரிசைக் கிரமமாக ஒன்றாவது, இரண்டாவது என்று எல்லா வேட்பாளர்களுக்கும் தனது விருப்பப்படி பதிவு செய்யலாம். எந்த வேட்பாளருக்கு மொத்தத்தில் 51 சத வோட்டுகள் கிடைக்கிறதோ அவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்படுவார். மேல் நாடுகளில் இம்முறை கையாளப்படுகிறது.

ஆனால் இங்கே, நம் நாட்டில் பல தொகுதி அமைப்பும், விகிதாசார மாற்று வோட்டு முறையும் சிக்கல் மிகுந்தவை என்பதனாலும், கோடிக் கணக்கில் வாக்காளர்கள் இருப்பதால் செயல்படுவது மிகக் கஷ்டம் என்ற காரணத்தினால் அமுலில் இல்லை.

ஆனாலும் ஒரு தொகுதி ஒரு பிரதிநிதி என்ற இப்போதுள்ள அமைப்பிலும் கூட சில மாறுதல்களுடன் மாற்று வோட்டு விகிதாசார முறை மேற்கொள்ளலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. 51 சத வோட்டு எந்த வேட்பாளருக்கும் கிடைக்கவில்லையானால், அதிக எண்ணிக்கை பெற்ற முதல் இரண்டு வேட்பாளர்களுக்குள் மட்டும், இரண்டாவது தடவையாகப் போட்டி ஏற்படுத்தி மாற்று வோட்டு மூலம் யாருக்கு 51 சத வோட்டுக் கிடைக்கிறதோ அவரைத் தேர்ந்தெடுக்கலாம். இந்த இரண்டாவது வோட்டு முறை இந்தியச் சூழ்நிலையில் அமுல்படுத்துவது சாத்தியமே. வாக்காளர்களின் சிந்தனையை ஊக்குவித்து அரசியல் அறிவை வளர்க்கும்.

இப்போதுள்ள சட்டப்படி, ஒரு தடவை தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டால் சட்ட சபையின் முழு ஆயுள் காலத்துக்கு ஐந்தாண்டு காலத்துக்கு (இனி 42வது திருத்தத்துக்குப் பின்) ஆறு ஆண்டுகளுக்குப் பிரதிநிதியாக இருப்பார். இந்த நீண்ட காலத்தில் பிரதிநிதிகள் சட்டசபை நடவடிக்கைகளில் போதிய பங்கு கொள்ளாமலோ, அல்லது விரும்பத் தகாத நடவடிக்கைகளினாலோ, தனது தொகுதிச் செல்வாக்கை இழந்துவிடலாம். இது சாத்தியமே. ஆனாலும் அவரைப் பிரதிநிதித்துவ அந்தஸ்திலிருந்து விலக்க முடியாது. இத்தகைய வேண்டாத பிரதிநிதிகளைத் திருப்பி அழைக்கத் தொகுதி மக்களுக்கு உரிமை வேண்டும் என்று திரு ஜெயப்பிரகாஷ் நாராயண் வற்புறுத்தி வருகிறார். குறிப்பிட்ட குறைந்தபட்ச எண்ணிக்கையுள்ள தொகுதி வாக்காளர்கள், தங்கள் பிரதிநிதி உபயோகமற்றவர் என்று எண்ணினால், அவர்கள் பொதுஜன வாக்கெடுப்புக் கோரலாம். பிரதிநிதியை வாபஸ் பெறுவதா வேண்டாமா என்பது மட்டுமே அந்தப் பொதுஜன வாக்கெடுப்புக்கு விஷயமாக இருக்க வேண்டும். வாக்கெடுப்பில் பிரதிநிதியைத் திருப்பி அழைத்துவிட வேண்டும் என்று முடிவானால் அவரைச் சட்ட சபையிலிருந்து விலக்கிவிட்டு, இடைக்கால மறு தேர்தல் அந்தத் தொகுதியில் நடைபெறல் வேண்டும். இது ஜெயப்பிரகாசருடைய யோசனை. இதைப் பல அரசியல் சிந்தனையாளர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. இதனால் சட்டசபைகள் ஒழுங்காகச் செயல்படுவது தடைப்படும் என்பது ஒரு காரணம். பிரதிநிதிகளும் தங்கள் மன அமைதியை இழந்துவிடுவர் என்பதும் ஒரு காரணம்.

இவ்விரண்டு கருத்துக்குமிடையே ஒரு சமரசம் காண முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது. பிரதிநிதியை வாபஸ் பெறும் உரிமையைத் தொகுதி மக்களுக்கு ஒரு தடவை மட்டுமே வழங்கலாம். அதுவும் தேர்தல் நடந்த நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு, அல்லது அடுத்த தேர்தலுக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு. இந்த நிபந்தனை நல்ல பலன் தரும். பிரதிநிதிகளை எப்போதும் உஷார் நிலையிலேயே வைத்திருக்கும். தங்கள் நடவடிக்கைகள் பற்றித் தொகுதி மக்களுக்கு அடிக்கடி சொல்லிக் கொள்ள வேண்டிய பழக்கமும் வளரும்.

தேர்தல்களில் பண பலத்தைக் கடுமையாகக் கட்டுப்படுத்துவது அத்தியாவசியமான தேவை. இதை அடிக்கடி சொல்லியிருக்கிறேன். எத்தனை தரம் சொன்னாலும் மிகைபடச் சொன்னதாகாது. தனி மனிதர் பெருமை ஓர் இயக்கமாகவே ஆவதையும் கட்டுப்படுத்த வேண்டும். தேர்தல் முறை சீர்திருத்தங்களை உரிய காலத்தில் ஜனதா கட்சி மேற்கொள்ளும் என்று எதிர்பார்ப்போம்.

உ

# “ஷட்பதீ” ஸ்தோத்திரம் (22)

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

பகவான் விஷ்ணுவின் பாதங்களைத் தாமரைப் பூவுக்கு ஒப்பிடுகிறார் நம் பகவத் பாதர்கள்:

**ஸ்ரீ பதி பதாரவிந்தே**

'பத அரவிந்தம்' என்றால் திருவடித் தாமரை. ஸ்ரீ என்றால் மகாலக்ஷ்மி. ஸ்ரீபதி —லக்ஷ்மிநாராயணன். லக்ஷ்மிக்குத் தாமரைப் பூ சம்பந்தம் ரொம்பவும் ஜாஸ்தி.

**பத்ம ப்ரியே பத்மினி பத்மஹஸ்தே**
**பத்மாலயே பத்ம தளாயதாக்ஷி**

என்று அவளை ஸ்தோத்திரம் செய்வார்கள். அவளுக்குத் தாமரைப் பூவிடம் பிரியம் அதிகம். அதிலேயேதான் உட்கார்ந்திருக்கிறாள். அவளுடைய நான்கு கைகளில் இரண்டில் இரண்டு தாமரைப் பூவைத்தான் வைத்துக் கொண்டிருக்கிறாள். அவளுடைய முகம், கண்கள் எல்லாமும் தாமரை மாதிரியே இருக்கின்றன. 'பத்மாவதி', 'கமலா' என்றெல்லாம் தாமரையை வைத்தே அவளுக்குப் பெயர்கள் இருக்கின்றன.

இதற்கேற்றாற்போல் அவளுடைய பதி, ஸ்ரீபதியின் பதம் தாமரையாக இருக்கிறது: **ஸ்ரீபதி பதாரவிந்தே.**

தாமரை என்றால் அதிலிருந்து தேன் சுரக்க வேண்டும். பகவானின் பாத தாமரையிலிருந்து எந்தத் தேன் சுரக்கிறது?

**திவ்யதுனீ மகரந்தே.**

'மகரந்தம்' என்றால் தேன். 'துனீ' என்றால் நதி. 'திவ்ய துனீ' என்றால் தேவலோகத்து நதி. கங்கைதான் ஆகாசத்திலும் பூமியிலும் பாதாளத்திலும் மூன்று பெயர்களில் பாய்கிற நதி. மஹாபலி சக்கரவர்த்தியின் யாகத்தில் பகவான் குட்டை பிரம்மசாரியாக வந்து அப்புறம் விச்வாகாரமாக த்ரிவிக்ரமாவதாரம் செய்து ஒரே காலால் தேவலோகம் முழுதையும் அளந்தார் அல்லவா? அப்போது அந்தப் பெரிய பாதம் தேவலோகத்தை எட்டியபோது பிரம்மா ஓடோடி வந்து அந்த திவ்ய சரணத்துக்கு அபிஷேகம் பண்ணினார். அப்படிப் பண்ணிய ஜலமே (மந்தாகினி என்ற பெயரில்) ஆகாச கங்கையாகிவிட்டது. அது தான் 'திவ்ய துனீ'.

பகவானின் மஹா பெரிய பாத பத்மத்திலிருந்து அபிஷேக ஜலம் கங்கையாகப் பாய்வதைப் பார்க்கிறபோது, வெளியிலிருந்து பிரம்மா அதில் ஜலத்தைக் கொண்டு வந்து வார்த்து, அந்த ஜலம் வழிகிற மாதிரி இல்லை. பெரிய தாமரைப்பூ மாதிரி இருக்கிறதே இந்தப் பாதம், இந்தத் தாமரையேதான் அந்தக் கங்கையான தேனைத் தன்னிலிருந்தே பொழிய விடுவது போல் இருக்கிறது — **திவ்ய துனீ மகரந்தே.**

பகவானின் பாத தாமரை ஸுகந்தம் வீசுகிறது. நாமெல்லாம் ஸென்ட் போட்டுக் கொண்டால்தான் வாஸனை. பகவான் ஸ்வாபாவிகமாகவே (இயற்கையாகவே) திவ்ய வாஸனை வீசுகிற தேகம் கொண்டவன். 'ஸுகந்திம்', 'கந்த த்வாராம்' என்றெல்லாம் வேதத்திலேயே சொல்லியிருக்கிறது.

**பரிமள பரிபோக ஸச்சிதானந்தே** என்று ஆசார்யாள் சொல்கிறார். பரிமளம் என்றால் ஸுகந்தம். 'பரிமள ரங்கநாதர்' என்றுகூட உண்டு.

'பரிபோகம்' — ருசித்துச் ருசித்து அநுபவிக்கக் கூடியது. எத்தனை ருசித்தாலும் திகட்டாத ஆனந்தம் தருவது. எப்படிப்பட்ட ஆனந்தம்? சாதாரண விருந்து, நீளாச் சாப்பாடு சாப்பிடுகிற ஆனந்தமா? இல்லை. (தைத்திரீய) உபநிஷத்தில் ஆனந்தத்துக்கு மேல் ஆனந்தம் என்று ஒவ்வொரு தினுசான ஆனந்தத்தையும் அடுக்கிக்கொண்டே போய் அதன் உச்சியாகச் சொல்லியிருக்கிற பிரம்மானந்தத்தையே தருவது பகவானின் பாதம். பிரம்மத்தை ஸத்-சித்-ஆனந்தம் என்பார்கள். அதுதான் அறியப்படுவதாகவும் அறிகிறவனாகவும் கூட இருக்கிற அறிவு: சித். அந்த நிலையில் தனக்கு வேறாக எதுவுமே இல்லாமலிருப்பதுதான் சாச்வத ஆனந்தம்; ஸச்சிதானந்தம். இந்த ஸச்சிதானந்தத்தையே தேனாகப் பொழிந்துகொண்டும், ஸுகந்தமாக வீசிக்கொண்டும் இருப்பது ஸ்ரீபதியின் பதாரவிந்தம்:

**திவ்யதுனீ மகரந்தே**
**பரிமள பரிபோக ஸச்சிதானந்தே**
**ஸ்ரீபதி பதாரவிந்தே**

அது ஸச்சிதானந்தத்தைக் கொடுக்க வேண்டும் என்றால் அதற்கு முன்னால் இந்த ஸம்ஸார பயத்தைக் **கெடுக்க** வேண்டும்.

(தொடரும்)



[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு



மாண்டேகு-கிளெம்ஸ்ஃபோர்டு அறிக்கை எனப் பெயர் கொண்ட சீர்திருத்தச் சாசனம் ஜூன் மாதத்தில் வெளி வந்தது. பிரிட்டானிய அமைச்சர் பெயராலும் இந்தியாவிலிருந்த ராஜப் பிரதிநிதி பெயராலும் அது ''மாண்டேகு-கிளெம்ஸ்ஃபோர்டு அறிக்கை'' எனப் பிரபலம் அடைந்தது. அவ்வறிக்கை, ராஜதானிகளுக்குப் பகுதி அளவில் சுயாட்சி வழங்கும் யோசனையை வெளியிட்டது. அதன்படி மக்கள் பிரதிநிதிகள் அடங்கிய சட்டசபைகளும் இந்திய மந்திரிகள் அடங்கிய அமைச்சரவையும் ஆட்சி நடத்தும்.

ஆனால் இதற்கு முரண்பாடான கருத்தமைந்த ஒரு பொறியையும் தந்திரமாகப் புகுத்தியிருந்தார்கள். முக்கியமான துறைகள் கவர்னருக்கும் அவரால் நியமிக்கப்பட்ட செயலாற்றும் குழுவுக்குமே ஒதுக்கப்பட்டிருந்தன. இக் குழுவின் அங்கத்தினர்கள் அமைச்சரவை மந்திரிகளை விட மிக அதிக அளவில் செல்வாக்குப் பெற்றிருந்தனர்.

மத்திய அரசில் அதிகாரப் பங்கீடே இடையாது. மாண்டேகுவுக்கு இந்தியா சுயாட்சிப் பாதையில் ஒரே தாவலில் வெகு தூரம் சென்று விட்டது போல் தோன்றியது. பெரும்பாலான இந்தியர்களுக்கோ தவழ்ந்து முன்னேறுவது போல் பட்டது.

ஆயின் மிதவாதிகள் அப்படி நினைக்கவில்லை. அவர்கள் அறிக்கையை வரவேற்றனர். அவர்கள் கூற்றுக்கு எதிர்மறையான வாதங்களைச் சமர்ப்பிப்பதற்கென்றே தெற்கே தேசிய வாதிகள் சங்கம் ஒன்று அமைந்தது. ஹிந்து பத்திரிகை ஆசிரியர் கஸ்தூரி ரங்க அய்யங்கார் அதன் தலைவர். ஸி. ஆர். காரியதரிசி. தீவிரவாதிகளின் லட்சியத்தைச் சென்னையில் பலப்படுத்துமாறு சேலம் சென்று ஸி. ஆரைக் கோரியவர்களுள் வேங்கடராமன் ஒருவர்.1

காங்கிரஸின் சென்னை ராஜதானி மகாநாடு ஆகஸ்டு முதல் வாரத்தில் மாண்ட்ஃபோர்டு அறிக்கையைப் பரிசீலித்தது. பதினெட்டு வயதான தேவதாஸ், தேசிய கீதங்கள் பாட நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. காந்தியின் புதல்வரான அவர் சென்னையில் ஹிந்தி போதித்து வந்தார்.

பண்டித மதன்மோகன் மாளவியா



''அறிக்கையை அலசியது போதும் ஆக்கபூர்வமாக ஏதேனும் செய்வோம்'' என்றார் ஸி. ஆர். ''இதைக் காட்டிலும் உண்மையான சீர்திருத்தங்களைக் கட்டாயமாகச் செய்தேயாக வேண்டிய சூழலை உருவாக்க எந்தவிதமான போராட்டங்களை நாம் மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றி காங்கிரஸ் யோசிக்கட்டும்'' என்ற அவர், மேலும் தொடர்ந்து கூறினார்: ''இதில்தான் இடது சாரிக்கும் வலதுசாரிக்கும் இடையில் உண்மையான வித்தியாசம் இருக்கிறது: அறிக்கையை ஏற்பதிலோ அல்லது ஒதுக்கி விடுவதிலோ அல்ல.''2

ருஷ்யப் புரட்சி, ஆண்டு நிறைவே கொண்டாடி விருந்தது. எனவே அப்புரட்சியின்

---

1. K.S. Venkataraman, Rajaji, Hindustan Publications, Madras, 1949.
2. The Hindu, 2-8-18.

அர்த்தம் இன்னும் தெளிவாகவில்லை. சில கோணங்களில் நோக்கும் போது அது கவலையளித்தது. இருப்பினும் இடதுசாரியினர் மாறுதலை விரும்புகிறவர்களாகவே தோன்றினர். 1918-ம் ஆண்டின் ஸி.ஆர். இடதுசாரி என்று முத்திரை பெறுவதை வரவேற்பவராகவே காணப்பட்டார்.

### வெற்றிப் பெருமிதம்

**ப**ம்பாயில் நடந்த விசேஷ மாநாட்டுக்கு இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் காங்கிரஸ்காரர்கள் வந்து கூடினர். சென்னை, தனது பங்குக்குத் தேசியவாதிகள் அடங்கிய கணிசமான அளவிலான ஒரு படையை அனுப்பியது. முன்கூட்டியே வங்கத்தின் ஆதரவைப் பெறத் தென்னிந்தியத் தூதர் ஒருவர் கல்கத்தா சென்றிருந்தார்.

சென்னையிலிருந்து வந்திருந்த வேறு சிலருடன் ஸி. ஆர்., ''ஸ்ரீதர் நிருவாம்'' என்ற ஹோட்டலில் தங்கினார். இங்குதான் திலகர் வழக்கமாகத் தங்குவது. இப்போதும் அவர் அங்குதான் இருந்தார். ஆனால் பொதுக் கூட்டங்களில் பேசுவதற்கு அவருக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன. பம்பாயிலேயே இருந்த போதிலும் காந்தி உடல் நலமின்றி இருந்தார். எனவே மகாநாட்டில் அவர் கலந்து கொள்ளவில்லை.

மாண்டெக்போர்டு அறிக்கை அனுதாபிகளான மிதவாதிகள் இதே நேரத்தில் இதற்குச் சமதையான மற்றொரு மகாநாடு நடத்தினர். லிபரல் கட்சி தோன்றுவதற்கு இது முதற்படியாக அமைந்தது.

திலகருக்கு வாய்ப்பூட்டு போடப்பட்டிருந்தது. காந்தியோ அரங்குக்குள்ளேயே நுழையவில்லை. இந்தச் சூழலில் காங்கிரஸ் மகாநாட்டில் வழிகாட்டிகளாக விளங்கியவர்கள் இருவர். வங்கத்தின் முன்னணி வழக்கறிஞரும் அப்பட்டமாகப் பேசுபவருமான சித்தரஞ்சன் தாஸ் ஒருவர். கண்ணியமிக்கவரும் உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்தவரும் வலதுசாரிகள் சார்பில் பேசுகிறவருமான மதன் மோஹன் மாளவியா மற்றொருவர்.

இருவருமே ஸி. ஆரிடம் ஆர்வம் காட்டினார்கள். மாளவியா ஸி. ஆரைச் சாந்தப்படுத்த எண்ணினார். அப்படி ஏதும் நேர்ந்துவிடாமல் இருக்க தாஸ் அபய கரம் நீட்டினார்.[3]

ஒற்றுமையை நிரூபிப்பதே போல், தாஸ் தயாரித்த ஒரு தீர்மானத்தை மாளவியா பிரேரேபித்தார். வங்கத் தலைவர் கேட்டுக் கொண்டதன் பேரில் ஸி. ஆர். மாற்றி அமைத்திருந்த அந்தத் தீர்மானம் சுயாட்சிக்கான லக்ஷ்ய திட்டத்தை அரசுக்கு நினைவூட்டியது. மாண்டெக்போர்டு சீர்திருத்தங்களைத் திருப்தி தராதனவாகவும் ஏமாற்றமளிப்பனவாகவும் வர்ணித்தது.[4]

ஸி. ஆர். ஆற்றிய பணியை தாஸ் ஒப்புக் கொண்டு பேசினார்: ''இரு தரப்புக்கும் சம்மதமான ஒரு தீர்வு எங்கள் கரங்களை விட்டு நழுவிக் கொண்டேயிருந்தது. நாங்கள் கவலை அடைந்தோம்'' என்ற தாஸ், ஸி. ஆரைச் சுட்டிக் காட்டிவிட்டுத் தொடர்ந்து பேசினார். ''அந்தச் சமயத்தில் இந்த மெலிந்த சென்னை (ராஜதானி) வாசி எங்களிடையே தோன்றினார். இங்கே ஒரு கால் புள்ளி அங்கே ஒரு அரைப் புள்ளி என்று வைத்தார். இங்கே ஒரு சொற்றொடரைச் சேர்த்தார்; அங்கே ஒன்றை நீக்கினார். எல்லாரும் மகிழ்ச்சியும் வியப்பும் அடையுமாறு சில நிமிஷங்களுக்குள் அனைவரும் ஒப்புக்கொள்ளக் கூடிய ஒரு தீர்மானத்தை உருவாக்கியிருந்தார்.''[5]

ஸி. ஆரின் வெற்றி சென்னைக் கோஷ்டியை ஆனந்தத்தில் ஆழ்த்தியது. ''ஒரு சாம்ராஜ்யத்தையே வெற்றி கொண்டு விட்டது போன்ற பெருமிதத்துடன் நாங்கள் வீடு திரும்பினோம்'' என்று எழுதினார் வேங்கடராமன்.[6]

ஸி. ஆர். சென்னை நகரிலேயே வாழ வேண்டும் என்ற வற்புறுத்தல் அதிகரித்தது. ''ஸ்ரீதர் நிருவா''த்தில் ஸி. ஆருடன் பேசிய திலகர், நாற்பது வயதான அவ்வழக்கறிஞர் செயலாற்றுவதற்கு மிகச் சிறிய ஊரான சேலம் போதாது என்று கூறியதாகத் தெரிகிறது. சென்னையைத் தமது தலைமையகமாகக் கொள்ளுமாறு ஸி. ஆரை வற்புறுத்தும் கடிதம் ஒன்று ஆசிரியர் கஸ்தூரிரங்க அய்யங்காரிடமிருந்து சென்றது.

இதற்கிடையில் ஸி. ஆர். தமது நண்பர் ஆதிநாராயண செட்டியின் ஆதரவுடன் நடத்திய சேலம் அரசியல் மகாநாட்டில் பிரமாதமான உற்சாகம் நிலவியது. மூந்நூறு பிரதிநிதிகளும் ஆயிரத்து ஐந்நூறு பார்வையாளர்களும் திரண்டிருந்தனர்.[7]




---

3. C.R., Governor's Speeches, Govt. of West Bengal, Calcutta, 1948, P. 252.
4. Tendulkar, Mahatma, Bombay, 1951, Vol. I, P. 288.
5. K. S. Venkataraman, Rajaji, 1949.
6. K. S. Venkataraman, Rajaji, 1949.
7. The Hindu., 14-8-18.

# 8. அதிர்ச்சியுற்ற சேலம் அக்கிரகாரம்

அரசியல்வாதியாக அதிகரித்த முக்கியத்துவத்துடன் பணியாற்றிய அதே நேரத்தில் வி. ஆர். சேலம் நகரசபைத் தலைவராகவும் விளங்கினார். நகரசபை உறுப்பினர் அல்லவெனினும் அவர் இப்பதவிக்கு 1917 ஜூன் 18ல் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். மூன்றாண்டு உறுப்பினர் பதவி 1914ல் முடிவுற்ற பிறகு அவர் மீண்டும் தேர்தலுக்கு நிற்கவில்லை.

உறுப்பினரல்லாத ஒருவரை ஒரு நகரசபை, தலைவராக ஏற்றுக் கொள்ள வழி முறைகள் அனுமதித்த போதிலும் இந்த ஷரத்து சாதாரணமாகப் பயன்படுத்தப்படுவதே இல்லை. 1917ல் சேலம் நகரசபை அவ்வாறு செய்யக் காரணங்கள் இருந்திருக்க வேண்டும்.

அவற்றில் சிலவற்றை ஊகிக்கலாம். தொடர்ந்து நாலு ஆண்டுகளாகச் சேலத்தைக் கொள்ளை நோய் தாக்கி யிருந்தது. நகரை விரிவுபடுத்தத் திட்ட மிருந்தது. திறமை மிக்க ஒரு தலைவர் தேவைப்பட்டிருக்கலாம்.

நீதி மன்றம், முக்கியமாக மங்காவின் மறைவுக்குப் பிறகு, வி. ஆருக்கு முழுத் திருப்தி அளிக்கவில்லை. எனவே வி. ஆர். தலைமைப் பதவியை ஏற்கத் தயாராக இருந்தார். எனினும் பெண்ட்லாண்ட் பிரபுதான் அவரை அங்கீகரித்துக் கையெழுத்திட வேண்டும்.

சேலம் நகரசபை தம்மைத் தலைவராகத் தேர்ந்தெடுப்பதற்கு முதல் நாள்தான், ஜூன் 17ந் தேதி அன்று, அன்னிபெஸண்ட் கைதானதை யொட்டி வி. ஆர். பெண்ட்லாண்டைத் தாக்கி யிருந்தார். ஜூன் 18ந் தேதி வி. ஆர். கேட்டுக் கொண்டதற்கிணங்க சுயாட்சி சங்கத்தின் சேலம் கிளை, பெண்ட்லாண்டை, பிரிட்டன் திரும்ப அழைத்துக் கொள்ள வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றி யிருந்தது.

எனவே கவர்னரின் ஒப்புதல் ஓரளவு தாமதமானதில் வியப்பில்லை. ஆயினும் ஜில்லா கலெக்டர் இ. டபிள்யூ. லே சேலத்தின் முடிவை ஆமோதித்திருந்ததால் வி. ஆரின் இரண்டாண்டு பதவிக் காலம் ஜூலை 10ல அரசாங்க கெஜட்டில் பதிவாயிற்று.

பிரிட்டிஷ் ஆட்சியின் சின்னமாகவும் ஜில்லாவில் அதன் பிரதிநிதியாகவும் விளங்கிய கலெக்டருக்கு, ஒரு நகரசபையை அவசியம் நேர்ந்தால் தம் பொறுப்பில் நடத்திக் கொள்ள அதிகாரம் உண்டு. அது எவ்வாறாயினும் லேயும் வி. ஆரும் ஒருவரை யொருவர் புரிந்து கொண்டு மரியாதையுடன் உறவாடினர்.

சேலம் நகரையும் சூரமங்கலத்தையும் இணைக்க புதிய இருப்புப் பாதையில் வெள்ளோட்டம் நடைபெற்றபோது பதினாறு வயதான கிருஷ்ணசாமியை, லேக்குக் கீழ் பணியாற்றிய வி. ஆரின் சகோதரர்களில் ஒருவர் லேக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். கலெக்டர் அன்புடன் சிறுவனிடம் உரையாடினார்.

## நகரசபையின் வருவாய் அதிகரிக்கிறது

வி. ஆருடைய பதவிக் காலத்தின் முதல் ஆண்டில் நகரசபையின் வருவாய் ரூ. 94,794 இதில் ரூ. 35,392 வீட்டு வரி. ரூ. 33,346 குடிநீர் விநியோகம், கழிநீர் கால்வாய் வசதி ஆகியவற்றுக்காக வசூலித்த தொகை. சுங்கச் சாவடிகளில் ரூ. 10,000 கிடைத்தது. அடுத்த ஆண்டில் நகர சபையின் வருமானம் ரூ. 1,14,852 ஆக உயர்ந்தது.[8]

சில பள்ளிகளை நடத்துவது, உயர்நிலைப் பள்ளி வகுப்புக்களையும் எஃப். ஏ. வகுப்புக்களையும் கொண்டிருந்த சேலம் கல்லூரியை நடத்துவது, அரசி அலெக்ஸாண்ட்ரா மருத்துவ மனையைக் கவனித்துக் கொள்வது ஆகியன நகரசபையின் முக்கிய பணிகள்.

நகருக்குக் குடிநீர் விநியோகித்தல், குப்பை கூளம் நீக்குதல், தெருக் கூட்டுதல், தெரு விளக்குகளை எரியச் செய்தல் ஆகியவையும் நகரசபையின் பொறுப்புக்கள்தாம். பள்ளி வகுப்புக்களையும் மருத்துவ விநியோகச் சாவடிகளையும் எண்ணிக்கையில் அதிகரிக்க முயலவும்வேண்டும்; இருப்பினும் நிறைவேற்ற வேண்டிய காரியங்களுக்கு ஏற்பப் பொருளாதார ரீதியிலும் தொழில் நுணுக்க ரீதியிலும் வி. ஆரிடம் போதிய அளவு வசதிகள் இருக்கவில்லை.

உதாரணமாக, வி. ஆரின் தலைமைப் பதவிக் காலத்தில் கோட்டை.. ஜூபிலி மகமதியப் பள்ளிக்கு ஒரு கட்டிடம் எழுப்ப மட்டுமே வரவு செலவுத் திட்டம் அனுமதித்தது. 'பல்வேறு பள்ளிகளில் படித்த சேலம் குழந்தைகளைக் குறிப்பிட்ட கால இடைவெளிகளில் மருத்துவப் பரிசோதனை செய்ய ஒரு டாக்டருக்கு ஊதியம் வழங்கக்கூட நகர சபையில் பணம் இல்லை' என்று வி. ஆர். குறைப்பட்டுக் கொண்டார். இத்தனைக்கும் அன்று பள்ளி சென்ற சேலம் குழந்தைகளின் எண்ணிக்கை ரொம்ப அதிகமல்ல.[9]

## கண்டிப்பும் கருணும்

நகரசபையின் செலவினங்கள் குறிப்பிட்ட அம்சங்களுக்கென்று கண்டிப்புடன் - வரையறுக்கப்பட்டிருந்ததால், பொதுமக்களுக்குக் குடிநீர்க் குழாய் வைக்க எண்ணியபோதோ அல்லது ஐந்தாவது வர்ணத்தினரான ஹரிஜனக் குழந்தைகளுக்குச் சிறு பள்ளிகளை நிறுவ ஆசைப்பட்டபோதோ வி. ஆர். நகர மாந்தரிடம் நன்கொடை வசூலிக்க நேர்ந்தது. சென்ட்ரல் கல்லூரியில் வி. ஆருக்குக் கீழ் வகுப்பில் படித்திருந்த எம். ஜி. வாசுதேவய்யா என்ற பிராமண வழக்கறிஞர், தஞ்சம்பட்டியில் ஆரம்பமாகவிருந்த ஹரிஜனப் பள்ளிக்கு ஆகும் வருடாந்தரச் செலவு

---

8. From Report of Salem Municipal Council to Madras Govt. in file G.O. 1301 M of 1918 and in file G.O. 2000 M of 1919, Tamil Nadu Archives.

9. In article in local Self - Government Gazette, July 1918, referred to in Editorial in The Hindu, 2-8-18.

VOLTAS

**இப்போது**

# உண்மையிலேயே ஆட்டோமாடிக் டி:ப்ராஸ்டிங் வசதி உள்ள

# வோல்டாஸ் ஓபல் 160 ஆடோ-D ஆப்ஷன் கொண்டது.

முதல் தரத்தில் முதலீடு செய்க

## ஆட்டோ-D அளிக்கும் பல்வேறு பயன்கள்:



**பட்டன் அமுக்க வேண்டிய அவசியமில்லை!**

இந்த ரெ:ப்ரிஜிரேடரில் உள்ள ஸ்விட்ச் இரவுதோறும் தானாகவே அணைந்து திரும்பவும் இயங்குகிறது. அதன் விளைவு, தானாகவே டி:ப்ராஸ்ட் செய்து கொள்கிறது.



**ட்ரேயை காலி செய்யத் தேவையில்லை!**

இதில் தண்ணீரை ஆவியாக மாற்றும் ஒரு இணையற்ற ஆட்டோமாடிக் வசதி உள்ளிணைக்கப்பட்டுள்ளது. அது உங்கள் வேலையை எளிதாக்கி, நீங்கள் ஆச்சரியிக்கும் வண்ணம் தண்ணீரை வெளியேற்றி விடுகிறது!



**குறைந்த மின்சார கட்டணம்!**

தண்ணீரை வெளியேற்றும் ஆட்டோமாடிக் வசதி உங்கள் வேலையை எளிதாக்குவதோடல்லாமல் அதிகபட்சமான குளிர்ச்சியையும் பெற வழி செய்கிறது. அதன் பயனாக மின்சார கட்டணம் மாதந்தோறும் குறைகிறது.



**வோல்டாஸ் ஓபல் 160—ஆட்டோ-D ஆப்ஷன் இணைந்த ஒரே மீடியம் சைஸ் ரெ:ப்ரிஜரேடர். இன்றே உங்கள் விற்பனையாளரிடம் சென்று பார்வையிடுங்கள்.**

அங்கீகாரம் பெற்ற வோல்டாஸ் விற்பனையாளர்களிடம் கிடைக்கிறது—
அவர்களோடு தொடர்பு கொள்ளுங்கள்.

**வோல்டாஸ் லிமிடெட்**

பம்பாய் • கல்கத்தா • புது தில்லி • சென்னை • பெங்களூர் • லக்னோ • ஜம்ஷெட்பூர் • அஹமதாபாத் • செகந்திராபாத் • கொச்சி • கான்பூர்

வழங்குவோர்:
**வோல்டாஸ்**
குளுமை தருவதையே குறிக்கோளாகக் கொண்டவர்கள்.



# இது மணியைக் காட்டும் முன்பு, நூற்றுக்கணக்கான மணி நேரம் பிடிக்கிறது ஒரு டைம்ஸ்டார் கடிகாரம் தயாரிக்க.

OBM/7262 TM

நூற்றுக்கணக்கான மணிநேர ஆழ்ந்த கவனம் மற்றும் பராமரிப்புக்குப்பின், ஒவ்வொரு டைம்ஸ்டார் கடிகாரத்தின் நுட்பத்திறன் நமக்கு நம்பிக்கை அளிக்கிறது: ஒவ்வொரு மணியும்...ஒவ்வொரு நிமிடமும் ஒவ்வொரு விநாடியும்.

இந்தப் பணிக்கு பெரும் திறமை, நவீன தொழில்–நுட்பம் மற்றும் எல்லையற்ற பொறுமை தேவை.

டைம்ஸ்டார் பாகம் பாகமாகப் பூட்டப்பட்டு, மிகவும் நுட்பமாக சரிசெய்து பொருத்தப்படுகிறது.

டிசைன் மற்றும் வளர்ச்சியில் அதிநவீன அறிவு கொண்டுள்ள, வெளிநாட்டில் பயிற்சி பெற்றுள்ள, நம் நாட்டு என்ஜினீயர்கள் இதன் உற்பத்தியை மேற்பார்வை யிடுகின்றனர்.

டைம்ஸ்டாரின் 95 சதவிகித பாகங்கள் அதிநவீன ஆட்டோமாட்டிக் ஸ்விஸ் இயந்திரங்களின் உதவியால், மிகவும் துல்லியமான சரிநுட்பத்துடன் நம் நாட்டிலேயே தயாரிக்கப்படுகின்றன. இதன் உயர்ந்த தரத்தின் சோதனை மிகவும் சரிநுட்பமான அசெம்ப்ளி இயந்திரங்களில் செய்யப்படுகின்றது.

டைம்ஸ்டார் கடிகாரத்தை வாங்குவீர் நம்பிக்கையுடன்; அணிந்திடுவீர் பெருமையுடன்.

**TIMESTAR**

டைம்ஸ்டார்—இந்தியாவின் இணையற்ற கைக்கடிகாரங்கள்.

**இண்டோ-பிரெஞ்ச் டைம் இண்டஸ்ட்ரீஸ் லிட்.**, 12, உத்யோக் நகர், எஸ்.வி. ரோடு, கோரேகான் (வெஸ்ட்), பம்பாய் 400 062.

களில் ஒரு பகுதியைத் தாம் மேற்கொள்வதாக வாக்களித்தார். உத்தரவாதமாகத் தமது நிலத்தின் ஒரு பகுதியைப் பள்ளிக்கே அடமானம் வைத்தார்.

வாசுதேவய்யாவின் கீழ் இந்த முன்ஜாக்கிரதையான ஏற்பாடுகள் வி. ஆரை மகிழ்வித்திருக்கும். ஏனெனில் நகர சபையின் வரவு செலவுகளை ஒழுங்குபடுத்தும் பணியில் ஈடுபட்டிருந்த அவர், கல்நெஞ்சக்காரர் என்று பெயரெடுத்திருந்தார். நகரசபை ஊழியர்களிடமும் அவர் கண்டிப்புடன் நடந்து கொண்டார்.

அவரால் நியமிக்கப்பட்ட ஒரு குமாஸ்தா, சில நாட்களுக்குள்ளேயே இரண்டாவது கடவையாக 'உடம்பு சுகமில்லை' என்று கூறி நீண்டகால விடுமுறை கோரினார். வி. ஆர். ''ஒரு நோயாளியை வேலைக்கு அமர்த்திக் கொள்ளும் அளவுக்கு நகரசபைக்குப் பொருளாதார வசதி இல்லை'' என்பதாகக் குறிப்பிட்டு, அவரை வேலை நீக்கம் செய்துவிட்டார்.10

(தொடரும்)

தமிழாக்கம்: வெ. ராஜேந்திரன்



---

10. முன்னாள் குமாஸ்தா இ. எஸ். பாலசுப்ரமணிய அய்யர் சேலத்தில் பேட்டியின் போது கூறியது, 1973.

# மிஸ்டர் ஜெரிக்கோ

அபூர்வமான இரட்டை வைரங்கள். விலைமதிப்பற்றதும் காணக் கிடைக்காததுமான ஜெமினி வைரங்களான அந்த ஜோடியில் ஒன்று ஒரு கோடீசுவரரிடம் இருக்கிறது. மற்றதையும் தனதாக்கிக் கொள்ளும் துடிப்போடும் தவிப்போடுமிருக்கிறார் அவர். அவருடைய இந்த ஆசையைத் தனக்குச் சாதகமாக்கிப் பணம் பண்ணத் திட்டமிடுகிறான் ஒரு சாகசக்காரன். அவரிடமுள்ள ஒரிஜினல் ஒற்றை வைரத்தைத் திருடி அவரிடமே அதை விற்றுப் பெரும் பணம் சுருட்ட நினைக்கும் தந்திரக்காரரான டட்லி ஜெரிக்கோவின் சாகசங்களை விவரிப்பதே கதை. விக்டர் ரோலோ என்ற கோடீசுவரர் ஒற்றை வைரத்தை நவீன எலெக்ட்ரானிக் சாதனங்களின் உதவியோடு கட்டுக் காவலில் கனத்த இரும்பு அறைக்குள் வைத்துக் காப்பாற்றுகிறார். அத்தனையையும் தனது திறமையினால் கடந்து கடத்தி விடுகிறான் ஜெரிக்கோ. ஆனால் அத்தனை பாட்டுக்குப் பிறகு தான், அவன் கடத்தியது நிஜ வைரமல்ல, போலி வைரம் என்பது தெரிய வருகிறது. அப்படியானால் உண்மை வைரம் யாரிடம் இருக்கிறது?

இரட்டை வைரம் போலவே, இதில் ஒரே பெண் இரண்டு நபர்களாக வந்து ஜெரிக்கோவையும் கோடீசுவரர் ரோலோவையும் திணற அடிக்கிறாள். வைரத் திருட்டுக் கதையை மிகவும் சாமர்த்தியமாக விறுவிறுப்போடு கொண்டு போயிருக்கிறார்கள். கள்ளனுக்குள் குள்ளன் பாயும் காட்சிகள் கருத்துக்கு விருந்து.

உடல் வலுவைக் காட்டும் சண்டைக் காட்சிகள் கிடையாது. ஆனால் மூளையைப் பயன்படுத்தி எதிரியை முட்டாளாக்கும் சாகஸமும் சாமர்த்தியமும் கொண்ட கதை. கதாநாயகனைவிட வில்லன் போல வரும் ஹெர்பர்ட் லோம் கம்பீரமாகவும் கச்சிதமாகவும் நடித்திருக்கிறார். ஆரம்பத்திலும் முடிவிலும் ஒரு பாடம் — உள்ளத்தைத் துள்ள வைக்கும் டியூனில் பாடப்படுகிறது. படம் முடிந்து வெளியே வந்த பிறகும் 'மிஸ்டர் ஜெரிக்கோ' என்ற அதன் டியூன் ரீங்கரித்துக் கொண்டிருக்கிறது. படம் பிரமாதம் என்று சொல்ல முடியாவிட்டாலும் ஒன்றரை மணி நேரம் போனது தெரியாமல் போய் விடுகிறது. படத்தின் வெற்றிக்கு இந்த ஒரு சான்று போதாதா?

கௌசிகன்



# பார்த்திபன் கனவு

அத்தியாயம் 22

## "நிஜமாக நீதானா?"

மரத்தடியில் வந்து நின்ற குந்தவி தேவி சற்று நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தாள். விக்கிரமன் திரும்பிப் பார்க்கும் வழியாக இல்லை. காவேரியின் நீர்ப் பிரவாகத்திலிருந்து அவன் கண்களை அகற்றவில்லை. ஒரு சிறு கல்லை எடுத்து விக்கிரமனுக்கு அருகில் ஜலத்தில் போட்டாள். 'கொடக்' என்ற சத்தத்துடன் கல் அந்தப்பிரவாகத்தில் விழுந்து முழுகிற்று. சிறு நீர்த் துளிகள் கிளம்பி விக்கிரமன் மேல் தெறித்தன.

குந்தவியின் யுக்தி பலித்தது. விக்கிரமன் திரும்பிப் பார்த்தான். அவனுடைய கண்கள் அகல விரிந்தன. கண் கொட்டாமல் அவளைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். கண்களாலேயே அவளை விழுங்கி விடுபவன் போல் பார்த்தான். அவனுடைய உதடுகள் சற்றுத் திறந்தன, ஏதோ பேச யத்தனிப்பது போல். ஆனால் வார்த்தை ஒன்றும் வரவில்லை.

ஒரு பெருமூச்சு விட்டு விட்டு மறுபடியும் திரும்பிக் காவேரியின் பிரவாகத்தை நோக்கினான்.

குந்தவி இன்னும் சற்றுநேரம் நின்றாள். பிறகு மரத்தடியிலிருந்து வந்து நதிக் கரையில் விக்கிரமனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

அவள் உட்கார்ந்தபிறகு விக்கிரமன் இரண்டு மூன்று தடவை அவள் பக்கம் திரும்பினான். ஒவ்வொரு தடவையும் சற்று நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு வேறு பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு குந்தவி, ''நான் போகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு எழுந்திருந்தாள்.

விக்கிரமன் மிகவும் அதிசயமடைந்தவனைப் போல் அவளைத் திரும்பிப் பார்த்து.... ''நீ பேசினாயா?'' என்று கேட்டான்.

'' ஆமாம், நான் ஊமையில்லை!'' என்றாள் குந்தவி.

அமரர் கல்கி

குன்றாத அதிசயத்துடன் விக்கிரமன் அவளைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். குந்தவி மறுபடியும் பேசத் தொடங்கினாள்.

''நான் போகிறேன்.''

''ஏன் போகிறாய்?'' என்றான் விக்கிரமன் தழுதழுத்த குரலில்.

''நீர் பேசுகிற வழியைக் காணோம், அதனால்தான் கிளம்பினேன்'' என்று சொல்லிக் கொண்டே குந்தவி மறுபடியும் விக்கிரமனுக்கு அருகில் வந்து உட்கார்ந்தாள்.

''எனக்குப் பயமாயிருந்தது!'' என்றான் விக்கிரமன்.

''என்ன பயம்? ஓர் அபலைப் பெண்ணைக் கண்டு பயப்படுகிற நீர் தனி வழியே கிளம்பலாமா?''

''உன்னைக் கண்டு பயப்படவில்லை.''

''பின்னே?''

''நான் காண்பது கனவோ அல்லது ஜுர வேகத்தில் தோன்றும் சித்தப் பிரமையோ என்று நினைத்தேன். பேசினால் ஒருவேளை பிரமை கலைந்து விடுமோ என்று பயந்தேன்.''

குந்தவி புன்னகையுடன், ''இப்போது என்ன தோன்றுகிறது? கனவா, பிரமையா?'' என்றாள்.

''இன்னமும் சந்தேகமாய்த்தான் இருக்கிறது. நீ கோபித்துக் கொள்ளாமல் இருந்தால்....?''

''இருந்தால் என்ன?''

''நிஜமாக நீதானா என்று உறுதிப் படுத்திக் கொள்வேன்.''

இவ்விதம் சொல்லி விக்கிரமன் தன்னுடைய கையைக் குந்தவியின் கன்னத்தின் அருகில் கொண்டு போனான். ஜுரக் கனவுகளில் நிகழ்ந்தது போல் அந்த முகம் உடனே மறைந்து போகவில்லை. குந்தவி தன் முகத்தைத் திருப்பிக்கொள்ளவும் இல்லை. விக்கிரமனுடைய உள்ளங்கை, மலரின் இதழ்போல் மென்மையான குந்தவியின் கன்னத்தைத்

தொட்டது. பிறகு, பிரிய விருப்பமில்லாதது போல் அங்கேயே இருந்தது. குந்தவி அந்தக் கையைப் பிடித்து அகற்றிப் பழையபடி அவனுடைய மடியின் மீது வைத்தாள்.

புன்னகையுடன், ''உம்முடைய சந்தேகம் தீர்ந்ததா? நிச்சயம் ஏற்பட்டதா?'' என்றாள்.

''சந்தேகம் தீர்ந்தது. பல விஷயங்கள் நிச்சயமாயின'' என்றான் விக்கிரமன்.

''என்னென்ன?''

''நிஜமாக நீதான் இங்கே உட்கார்ந்திருக்கிறாய் — வெறும் பிரமையோ, கனவோ அல்ல என்பது ஒன்று.''

''அப்புறம்?''

''நீ கையினால் தொடமுடியாத தெய்வ கன்னிகையல்ல; உயிரும் உணர்ச்சியுமில்லாத தங்க விக்கிரகமும் அல்ல; — சாதாரண மானிடப் பெண்தான் என்பது ஒன்று.''

''இன்னும் என்ன?''

''இனிமேல் உன்னைப் பிரிந்து உயிர் வாழ்வது எனக்கு அசாத்தியமான காரியம் என்பது ஒன்று.''

குந்தவி வேறு பக்கம் திரும்பிக் கண்களைத் துடைத்துக் கொண்டாள். பிறகு விக்கிரமனைப் பார்த்து, ''என்னை உமக்கு ஞாபகம் இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''ஞாபகமா? நல்ல கேள்வி கேட்டாய்! உன்னைத் தவிர வேறு எந்த ஞாபகமாவது உண்டா என்று கேட்டிருந்தால் அதிகப் பொருத்தமாயிருக்கும். பகலிலும், இரவிலும், பிரயாணத்திலும், போர்முனையிலும், கஷ்டத்திலும் சுகத்திலும் உன் முகம் என் மனத்தை விட்டு அகன்றதில்லை. மூன்று வருஷ காலமாக நான் எங்கே போனாலும், எது செய்தாலும், என் இருதய அந்தரங்கத்தில் உன் உருவம் இருந்து கொண்டேதான் இருந்தது...''

''என்ன சொல்கிறீர்? நான் உம்மை மாமல்லபுரத்து வீதியில் சந்தித்துப் பத்து நாட்கள்தானே ஆயிற்று? மூன்று வருஷங்களா?...'' என்றாள் குந்தவி, கள்ளச் சிரிப்புடனும் அவநம்பிக்கையுடனும்.

விக்கிரமன் சற்று நேரம் திகைத்துப் போய் மௌனமாயிருந்தான்.

பிறகு, ''ஓஹோ! பத்து நாட்கள்தானா ஆயிற்று?'' என்றான்.

''பின்னே மூன்று வருஷங்கள் ஜுரம் அடித்துக் கிடந்தீரா?''

''சரிதான்! ஜுரத்தினால்தான் அத்தகைய பிரமை எனக்கு உண்டாகியிருக்கிறது. உனக்கும் எனக்கும் வருஷக் கணக்கான சிநேகம் என்று தோன்றுகிறது!''

''ஒருவேளை மாமல்லபுரத்து வீதியில் என்னைப் பார்த்ததற்கு முன்னாலேயே எப்போதாவது பார்த்த ஞாபகம் இருக்கிறதோ?'' என்று குந்தவி கேட்டாள்.

விக்கிரமன் சற்று யோசித்து, ''எனக்கு இன்னும் நல்ல ஞாபகசக்தி வரவில்லை. மனம் குழம்பியிருக்கிறது. அதிலும்....'' என்று தயங்கினான்.

''அதிலும் என்ன?'' என்று கேட்டாள் குந்தவி.

''அதிலும் உன்னுடைய நீண்ட கரிய விழிகளைப் பார்த்தேனானால் நினைவு அடியோடு அழிந்து போகிறது. என்னையும், நான் வந்த காரியத்தையும், இவ்வுலகத்தையும், எல்லாவற்றையுமே மறந்து விடுகிறேன்! வருஷம், மாதம், நாள் எல்லாம் எங்கே ஞாபகம் இருக்கப் போகிறது?''

''உமக்கு இன்னும் ஜுரம் குணமாகவில்லை. அதனால்தான் இப்படிப் பிதற்றுகிறீர். நீர் இங்கே தனியாக வந்திருக்கக் கூடாது.''

''இல்லை; எனக்கு ஜுரமே இப்போது இல்லை. நீ வேணுமானால் என் கையைத் தொட்டுப் பார்!'' என்று விக்கிரமன் கையை நீட்டினான்.

குந்தவி கையை இலேசாகத் தொட்டுவிட்டு, ''அப்பா! கொதிக்கிறதே!'' என்றாள்.

''இருக்கலாம்; ஆனால் அது ஜுரத்தினால் அல்ல...''

''இருக்கட்டும், கொஞ்சம் என் கண்களைப் பாராமல் வேறு பக்கம் பார்த்து ஞாபகப்படுத்திக் கொண்டு சொல்லும். நீர் யார், எங்கிருந்து வந்தீர் என்பதாவது ஞாபகம் இருக்கிறதா? எல்லாமே மறந்து போய் விட்டதா?'' என்று குந்தவி கேட்டாள்.

''ஆமாம்; இங்கே வந்து நதிக்கரையில் உட்கார்ந்து அதையெல்லாம் ஞாபகப்படுத்திக் கொண்டேன். சென்



பகத் தீவிலிருந்து கப்பலில் வந்தேன். இரத்தின வியாபாரம் செய்வதற்காக.''

''மாமல்லபுரத்து வீதியில் என்னைப் பார்த்த விஷயமும் ஞாபகம் இருக்கிறதல்லவா?''

''இருக்கிறது.''

''அரண்மனைக்கு வாரும்; சக்கரவர்த்தியின் மகள் இரத்தினம் வாங்குவாள் என்று சொன்னேனே, அது நினைவிருக்கிறதா?''

''இப்போது நினைவு வருகிறது.''

''நீர் ஏன் அரண்மனைக்கு வரவில்லை? ஏன் சொல்லாமல் கிளம்பி இரவுக்கிரவே தனிவழி நடந்து வந்தீர்?''

விக்கிரமன் சற்று நிதானித்து ''உண்மையைச் சொல்லட்டுமா?'' என்று கேட்டான்.

''இரத்தின வியாபாரிகள் எப்போதாவது உண்மையைச் சொல்லும் வழக்கம் உண்டு என்றால், நீரும் உண்மையைச் சொல்லும்.''

''சத்தியமாய்ச் சொல்லுகிறேன். உன்னை இன்னொரு தடவை பார்த்தேனானால், மறுபடியும் உன்னைப் பிரிந்து வருவதற்கு மனம் இடம் கொடாது என்ற காரணத்தினால்தான். அது ரொம்பவும் உண்மையான பயம் என்று இப்போது தெரிகிறது....''

''செண்பகத் தீவில் இப்படியெல்லாம் புருஷர்கள் பெண்களிடம் பேசி ஏமாற்றுவது



வழக்கமா? இதை அங்கே ஒரு வித்தையாகச் சொல்லிக் கொடுக்கிறார்களா?'' என்று குந்தவி ஏளனமாகக் கேட்டாள்.

''நீ ஒன்றை மறந்து விடுகிறாய். நான் செண்பகத் தீவிலிருந்து வந்தேனென்றாலும், நான் பிறந்து வளர்ந்ததெல்லாம் இந்தச் சோழ நாட்டில்தான். இந்தப் புண்ணியக் காவேரி நதியின் கரையில் தான் நான் ஓடியாடி விளையாடினேன். இந்த நதியின் பிரவாகத்தில்தான் நீந்தக் கற்றுக் கொண்டேன். இந்த அழகிய சோழ நாட்டின் குளிர்ந்த மாந்தோப்புகளிலும் தென்னந் தோப்புகளிலும் ஆனந்தமாக எத்தனையோ நாட்கள் உலாவினேன்! ஆகா! நான் செண்பகத் தீவிலிருந்த நாட்களில் எத்தனை நாட்கள் இந்த நாட்டை நினைத்துக் கொண்டு பெருமூச்சு விட்டேன்! இந்தக் காவேரி நதிதீரத்தை நினைத்துக் கொண்டு எத்தனை முறை கண்ணீர் விட்டேன்! மறுபடியும் இந்த நாட்டைக் காணவேண்டுமென்று எவ்வளவு ஆசைப் பட்டேன்!.... அந்த ஆசை இப்போது நிறைவேறியது; உன்னால்தான் நிறைவேறியது! உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?'' என்று விக்கிரமன் ஆர்வத்துடன் கூறினான்.

''எனக்கு நீர் நன்றி செலுத்துவதில் என்ன பிரயோஜனம்? உண்மையில் நீர் நன்றி செலுத்த வேண்டியது கோமகள் குந்தவிக்கு...''

''யார்...?''

''சக்கரவர்த்தியின் மகள் குந்தவி தேவியைச் சொல்லுகிறேன். உம்மை இங்கே அழைத்து வருவதற்கு அவர் தானே அனுமதி தந்தார்? அவருக்குத் தான் நீர் கடமைப் பட்டிருக்கிறீர்.''

''அப்படியா? எனக்குத் தெரிய வேண்டிய விஷயங்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. என் மனம் ஒரே குழப்பத்தில் இருக்கிறது. இந்த இடத்துக்கு நான் வந்து சேர்ந்திருக்கிறேன், காவேரி நதிக் கரையில் உட்கார்ந்திருக்கிறேன் என்பதை நினைத்தாலே ஒரே ஆச்சரியக் கடலில் மூழ்கி விடுகிறேன். வேறு ஒன்றிலும் மனம் செல்லவில்லை. நான் எவ்விதம் இங்கு வந்து சேர்ந்தேன் என்பதை விவரமாய்ச் சொல்ல வேண்டும். முதலில், நீ யார், உன் பெயர் என்னவென்று தெரிவித்தால் நல்லது.''

''மாமல்லபுரத்தில் சொன்னேனே, ஞாபகம் இல்லையா?''

''உன்னைப் பார்த்த ஞாபகம் மட்டும் தான் இருக்கிறது. வேறொன்றும் நினைவில் இல்லை.''

''என் பெயர் ரோஹிணி. சக்கரவர்த்தித் திருமகள் குந்தவி தேவியின் தோழி நான்.''

உண்மையில் அந்தச் சந்திப்பின் போது குந்தவி தன் பெயர் மாதவி என்று சொன்னாள். அவசரத்தில் சொன்ன கற்பனைப் பெயர் ஆனதால் அவளுக்கே அது ஞாபகம் இல்லை. இப்போது தன் பெயர் 'ரோஹிணி' என்றாள்.

அதைக் கேட்ட விக்கிரமன் சொன்னான்:

''ரோஹிணி! — என்ன அழகான பெயர்? — எத்தனையோ நாள் அந்தச் செண்பகத் தீவில் நான் இரவு நேரத்தில் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்ததுண்டு. பிறைச் சந்திரனுக்கு அருகில் ரோஹிணி நட்சத்திரம் ஜொலிக்கும் அழகைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்திருக்கிறேன். ஆனால், உன்னுடைய கண்களின் ஜொலிப்புக்கு அந்த ரோஹிணி நட்சத்திரத்தின் ஜொலிப்பு கொஞ்சமும் இணையாகாது.''

''உம்முடைய வேஷத்தை நான் கண்டுபிடித்து விட்டேன்...'' என்றாள் குந்தவி.

விக்கிரமன் சிறிது திடுக்கிட்டு, ''வேஷமா?...'' என்றான்.

''ஆமாம்; உண்மையில் நீர் இரத்தின வியாபாரி அல்ல. நீர் ஒரு கவி. ஊர் சுற்றும் பாணன். உம்முடைய மூட்டையில் இருந்தது இரத்தினம் என்றே நான் நம்பவில்லை!''

விக்கிரமன் சற்றுப் பொறுத்துச் சொன்னான்: ''இப்போது உன்னை நம்பும்படி செய்ய என்னால் முடியாது. ஆனால் அந்த மூட்டையில் இருந்தவை இரத்தினங்கள்தான் என்று ஒரு நாள் உனக்கு நிரூபித்துக் காட்டுவேன். நான் கவியுமல்ல. என்னிடம் அப்படி ஏதாவது திடீரென்று கவிதா சக்தி தோன்றியிருக்குமானால், அதற்கு நீதான் காரணம். உன்னுடைய முகமாகிய சந்திரனிலிருந்து பொங்கும் அமுத கிரணங்களினால்....''

''போதும், நிறுத்தும் உம்முடைய பரிகாசத்தை. இனிமேல் சகிக்க முடியாது'' என்றாள் குந்தவி.

''பரிகாசமா?'' என்று விக்கிரமன் பெருமூச்சு விட்டான். பிறகு, ''உனக்குப் பிடிக்காவிட்டால் நான் பேசவில்லை. நான் எப்படி இங்கே வந்து சேர்ந்தேன் என்பதைச் சொன்னால் ரொம்பவும் நன்றி செலுத்துவேன்'' என்றான்.

**இந்த அத்தியாயத்தில் விக்கிரமனும், குந்தவியும் சந்திக்கும் கட்டத்தை இவ்விதழ் அட்டையில் வண்ண ஓவியமாகத் தருகிறார் ஓவியர் விනු.**

புதியது!

அமுலின்
மால்ட்-கோகோ பானம்

# நியூட்ராமுல்

## ஒவ்வொரு கோப்பையும் உங்கள் ஆரோக்கியத்தை உயர்த்துகிறது

அமுல் இன்னுமொரு வெற்றிப் பானத்தை வழங்குகிறது. வலுவூட்டும் நியூட்ராமுல் பெரும் பரபரப்பூட்டும் புதுமையான ஆரோக்கிய பானம். அமுல் பால் நிரம்பியது, தூய மால்ட், புரதம், வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள் நிறைந்தது. ஒவ்வொரு கோப்பையும் உங்கள் சக்தியையும், வலிமையையும் அதிகரிக்கின்றது.

அதன் சுவையோ! ஆஹா! பிரமாதம்! ஏராளமான கோகோ. அதிக பால். கோகோவின் செழுமையான நற்பண்புகளை அது அளிக்கின்றது.

நியூட்ராமுல் உலகிலேயே தலைசிறந்தவற்றுள் ஒன்றான புதிய அமுல் பால் பண்ணையில் தயாரிக்கப்படுகிறது.

ஒவ்வொரு நியூட்ராமுல் டப்பாவிலும் 500 கிராம் நியூட்ராமுல் உள்ளது—மற்றவற்றைவிட 50 கிராம் அதிகம்—5 கோப்பைகள் அதிகமான தூய போஷாக்கு.

இன்றே நியூட்ராமுல் வாங்கிப்பாருங்கள்.








மார்க்கெட் செய்பவர்கள்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லி.
ஆனந்த், குஜராத்

daCunha/Nutra/1 Q Tam

''காஞ்சியிலிருந்து உறையூர் வரும் பாதையில் மகேந்திர மண்டபம் ஒன்றில் ஜுர வேகத்தினால் பிரக்ஞை இழந்து நீர் கிடந்தீர். அங்கு எப்படி வந்து சேர்ந்தீர், அதற்கு முன்னால் என்னென்ன நேர்ந்தது என்று நீர் சொன்னால், பிறகு நடந்ததை நான் சொல்கிறேன்.''

விக்கிரமன் தனக்கு நேர்ந்ததையெல்லாம் சுருக்கமாகச் சொன்னான்.

எல்லாவற்றையும் கேட்டு விட்டுக் குந்தவி தேவி கூறினாள்:

''சக்கரவர்த்தியின் மூத்த குமாரர் மகேந்திரரும், குந்தவி தேவியும் காஞ்சியிலிருந்து உறையூருக்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். தேவியுடன் நானும் வந்தேன். அந்தக் காட்டாற்றைத் தாண்டி வந்தபோது, மகேந்திர மண்டபத்துக்குள்ளிருந்து, 'அம்மா, அம்மா' என்று அலறும் குரல் கேட்டது. நான் அம்மண்டபத்துக்குள் வந்து பார்த்தேன். மாமல்லபுரத்தில் பார்த்த இரத்தின வியாபாரி நீர் என்று அடையாளம் கண்டு கொண்டேன். பிறகு குந்தவி தேவியிடம் உம்மையும் அழைத்து வர அனுமதி கேட்டேன். அவர் கருணை செய்து சம்மதித்தார். உமக்கு உடல் பூரண குணமாகும்வரையில் இங்கேயே உம்மை வைத்திருக்கவும் அனுமதித்திருக்கிறார்.''

''ஜுரக் கனவுகளில் நான் அடிக்கடி உன்னுடைய முகத்தைக் கண்டேன். அதெல்லாம் கனவல்ல, உண்மையிலேயே உன்னைத்தான் பார்த்தேன் என்று இப்போது தெரிகிறது.''

''இருக்கலாம்; நீர் ஜுரம் அடித்துக் கிடக்கையில் அடிக்கடி உம்மை நான் வந்து பார்த்தது உண்மைதான். இவ்வளவுக்கும் குந்தவி தேவியின் கருணைதான் காரணம்.''

விக்கிரமன் ஏதோ யோசனையில் ஆழ்ந்தான். குந்தவி கேட்டாள்:

''சக்கரவர்த்தியின் மகளைப் பற்றி நான் இவ்வளவு சொல்கிறேன். ஒரு வார்த்தையாவது நீர் நன்றி தெரிவிக்கவில்லையே? அவ்வளவு கல் நெஞ்சமா உமக்கு?''

''பல்லவ குலத்தைச் சேர்ந்த யாருக்கும் நான் நன்றி செலுத்த முடியாது!''

''குந்தவி தேவியை நேரில் பார்த்தால் இப்படிச் சொல்ல மாட்டீர். பிறகு என்னைக்கூட உடனே மறந்து விடுவீர்.''

''சத்தியமாய் மாட்டேன். ஆயிரம் குந்தவி தேவிகள் உனக்கு இணையாக மாட்டார்கள்! இருக்கட்டும். இப்போது இந்த மாளிகையில் அவர்கள் இருவரும் இருக்கிறார்களா?''

''யார் இருவரும்?''

''அண்ணனும் தங்கையும்.''

''யுவராஜா மகேந்திரர் இங்கே இல்லை. அவர் திரும்பவும் காஞ்சிக்குப் போய் விட்டார். சீன தேசத்திலிருந்து யாரோ ஒரு யாத்திரிகர் வந்திருக்கிறாராம். அவர் இந்தப் பாரத நாடு முழுவதும் யாத்திரை செய்துவிட்டுக் காஞ்சிக்கு வருகிறாராம். 'யுவான் சுவாங்' என்ற விசித்திரமான பெயரையுடையவராம். சக்கரவர்த்திக்கு இச்சமயம் முக்கிய வேலை வந்திருப்பதால் அந்த யுவான் சுவாங்கை உபசரித்து வரவேற்பதற்காக யுவராஜா உடனே வரவேண்டும் என்று செய்தி வந்தது. இங்கு வந்த இரண்டாம் நாளே மகேந்திரர் புறப்பட்டுப் போய்விட்டார். பார்த்தீரா, எங்கள் பல்லவ சக்கரவர்த்தியின் புகழ் கடல்களுக்கப்பால் வெகு தூரத்திலுள்ள தேசங்களில் எல்லாம் கூடப் பரவியிருப்பதை? நீர் போயிருந்த நாடுகளில் எல்லாம் எப்படி?'' என்று கேட்டாள் குந்தவி.

''ஆம்; அங்கேயெல்லாம் கூடப் பல்லவச் சக்கரவர்த்தியின் புகழ் பரவித்தான் இருக்கிறது.''

''அப்படிப்பட்ட சக்கரவர்த்தியின் ஆளுகையில் இருப்பது இந்தச் சோழ நாட்டுக்குப் பெருமை இல்லையா? இந்த நாட்டு அரச குமாரன் பல்லவ சக்கரவர்த்திக்குக் கப்பம் கட்ட மறுத்து அந்தச் செண்பகத் தீவில் போய்க் காலம் கழிக்கிறானாமே?'' என்று குந்தவி கேட்டு விக்கிரமனுடைய முகத்தை ஆவலுடன் நோக்கினாள்.

விக்கிரமன் அவளை நிமிர்ந்து நோக்கி, ''என்னைப் பொறுத்த வரையில் நான் இந்தச் சோழ நாட்டில் அடிமையாய் இருப்பதைக் காட்டிலும், செண்பகத் தீவில் சுதந்திரப் பிரஜையாக இருப்பதையே விரும்புவேன்'' என்றான்.

''நிச்சயமாகவா? என் நிமித்தமாகக் கூட நீர் இங்கே இருக்க மாட்டீரா?'' என்று குந்தவி கேட்டபோது விக்கிரமன் அவளை இரக்கத்துடன் பார்த்து, ''அத்தகைய சோதனைக்கு என்னை உள்ளாக்க வேண்டாம்'' என்றான்.

இருவரும் ஒருவரை யொருவர் அறிந்து கொண்டிருந்தார்கள். ஆனாலும் அறிந்து கொள்ளாதது போல் நடித்தார்கள். இந்த நாடகம் எத்தனை காலம் நீடித்திருக்க முடியும்? (தொடரும்)

கோவாவில் மோட்டார் சைக்கிள்கள் வாடகைக்குக் கிடைக்கின்றன.—நமது ஊரில் சைக்கிள்களைப் போல. —ஜே.எஸ். -பாலி

# A Love Affair with People

We've been carrying on this love affair with people for many years. It started with our own employees, a *parivar* of over 28,000 men and women working side by side in 17 ACC factories spread over the length and breadth of this gracious country of ours; some of whose families have served the Company for three generations.

More than twenty years ago we got amorously involved with village folk in the vicinity of our cement factories and quarries, assisting them to better their living conditions through self-reliance and responsible leadership. Trained Company workers organised community development programmes to guide and encourage them in agricultural development, expansion of village industries and crafts, setting up milk co-operatives and bettering educational facilities. The villagers themselves contributing the money, material and labour.

Today there are 12 Welfare Blocks operating around 11 ACC factories. From modest beginnings ACC's Welfare Scheme now covers about 225 villages and serves over 3 lakh people.

**ACC THE ASSOCIATED CEMENT COMPANIES LTD.**



# பனி நிலவு

மாயாவி

## 4. திருமண முயற்சி

மோகன் வியப்பால் திகைத்துப் போனான். ஆனால் அந்த வியப்பும் திகைப்பும் நீடிக்கவில்லை. அவற்றின் இடத்தைக்களிப்பும், மகிழ்ச்சியும் பிடித்துக்கொண்டு விட்டன. முன்பின் தெரியாத தன்னுடன் ஜெயகுமாரி இவ்வாறு விளையாட வேண்டுமென்றால்...?

ஜெயகுமாரி அழகும், குரலினிமையும், பேச்சு வல்லமையும் மட்டும் உள்ளவள் அல்ல; அவளுக்குச் சாமர்த்தியமும் சாதுரியமும்கூட இருக்கின்றன என்பதையும் அவனுக்கு அவள் ஆடிய அந்தச் சிறிய விளையாட்டு நிரூபித்தது.

வண்டியிலிருந்து இறங்கிச் சபாவுக்குள்ளே போகும்போது கூட அவள் தன் நாடகம் வெளியாகிவிட்ட அதிர்வையோ, 'உங்களை ஏமாற்றி விட்டேனே!' என்ற எக்களிப்பையோ முகத்திலாகட்டும், பேச்சிலாகட்டும் காட்டிக் கொள்ளவில்லை. ''ரொம்ப தாங்க்ஸ் சார்'' என்று ஒரு குமிழ் சிரிப்புடன் கூறிவிட்டு, அந்த ஜிப்பாக்காரரைப் பார்த்து, ''செக்ரட்டரி சார்! சார் மட்டும் எங்களுக்கு 'லிஃப்ட்' கொடுத்திருக்கலேன்னா, இன்னிக்கு நான் எப்போக் கச்சேரிக்கு வந்து சேர்ந்திருப்பேனோ தெரியாது. அதனாலே தயவுசெய்து அவருக்கு ஃப்ரண்ட் ரோவிலே அப்பா பக்கத்திலே ஒரு சீட் புரொவைட் பண்ணிடுங்க, சார்!'' என்று கூறிவிட்டு நகர்ந்தாள். சில அடிகள் சென்றதும், நின்று மோகனை நோக்கித் திரும்பிச் சற்று உரத்த குரலில், ''கச்சேரி முடிஞ்சதும் பார்க்கலாமா சார்? வீட்டுக்கு 'லிஃப்ட்' கேட்க மாட்டேன், பயப்படாதீங்க'' என்று கூறிக் கலகலவெனச் சிரித்து விட்டுச் சென்றாள்.

'இந்தச் சிரிப்பு ஒண்ணுக்கே இன்னிக்கு மட்டும் என்ன, வாழ்நாள் முழுக்க நான் ஒனக்கு 'லிஃப்ட்' கொடுக்கலாமே!' என்று மோகனின் மனம் கூறியது.

பிறகு என்ன? அன்று அவனுக்குச் சிவஞான சபாவில் ராஜோபசாரம் நடந்தது. ஜெயகுமாரியின் அப்பா (அவர் பெயர் கல்யாண சுந்தரம் என்பதை மோகன் பிறகு தெரிந்து கொண்டான்) ஹாலில் அவன் அருகே அமர்ந்து, தம் மகளின் குறும்புச் செயலுக்காக ஆயிரம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். தாய் இல்லாத பெண் என்று சிறு வயதிலிருந்தே அவளுக்கு அதிகமான செல்லம் கொடுத்து வளர்த்து விட்டதாகவும் அதுவே இத்தகைய குறும்புத்தனத்துக்குக் காரணம் என்றும் தம்மை நொந்து கொண்டார். மோகனைப் பற்றி எல்லாம் விசாரித்தார். அவன் முகவரியை எழுதி வாங்கிக்கொண்டு, தம் வீட்டு முகவரியைக் குறித்துக்கொள்ளச் சொன்னார். தங்கள் வீட்டுக்கு ஒருநாள் வரவேண்டும் என்று அழைத்தார். கடைசியாகத் தம் மகளுக்கு எங்கெங்கு எந்தெந்தத் தேதியில் கச்சேரிகள் இருக்கின்றன என்பதைச் சொல்லி, சென்னையில் நடக்கும் கச்சேரிகளுக்கெல்லாம் தவறாமல் வர வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

ஜெயகுமாரியின் அன்றையக் கச்சேரியை மோகன் வழக்கத்துக்கும் அதிகமான ஈடுபாட்டுடன், ஓர் உரிமை உணர்வுடன் ரசித்தான் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

கச்சேரி முடிந்ததும் கல்யாணசுந்தரம் மோகனை மேடைக்கு அழைத்துச் சென்றார்.

கல்யாணசுந்தரத்தின் குடும்பமே சங்கீதக் குடும்பம். அவரும் ஒரு நல்ல பாடகர்தான். தகப்பனார் தலைமுறை வரையில் குடும்பத்தில் ஒவ்வொருவரும் தங்கள் தந்தையிடமிருந்து சங்கீதத்தை முறையாகப் பயின்று அதையே தங்கள் பிழைப்பாகக் கொண்டிருந்தார்கள். கல்யாணசுந்தரமும் தம் தந்தையிடம் சங்கீத அப்பியாசம் செய்தார். ஆரம்பத்தில் சில காலம் கச்சேரிகள் செய்து கொண்டிருந்தார். ஆனால் பிறகு அவரால் இசைத் தொழிலில் தொடர்ந்து ஈடுபட முடியவில்லை. அவருடைய மனைவி — ஜெயகுமாரியின் தாய் — நீடித்த நோயாளியாகி விட்டதே அதற்குக் காரணம். ஜெயகுமாரியைப் பெற்றதிலிருந்து அந்த அம்மாளைக் காசநோய் பற்றிக்கொண்டு வாட்டி எடுத்தது. ஆறு ஏழு ஆண்டுகள் நோயுடன் போராடி விட்டு அவள் கண்களை மூடினாள். அந்த ஆறு ஏழு ஆண்டுகளும் வந்த கச்சேரிகளையெல்லாம் கல்யாண சுந்தரம் உதறித் தள்ளிக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று. மனைவி இறந்த பிறகு, அவர் பரம்பரைத் தொழிலில் ஈடுபட விரும்பினார். ஆனால் இசை உலகுடன் தொடர்பு விட்டுப் போனதால் அவரைச் சீண்டுவார் இல்லை. அதற்காகக் கல்யாணசுந்தரம் வருந்தவில்லை. தமக்குப் பதில் தம் மகளை மேடையேறச் செய்து விடுவதென்று, ஏழு வயதி

விருந்தே ஜெயகுமாரிக்கு இசைப் பயிற்சியை ஆரம்பித்தார்.

ஏறக் குறைய பத்து ஆண்டுகள் தந்தையும் மகளும் இசையே மூச்சாக, இசையே பேச்சாக வாழ்ந்தனர். பதினாறாவது வயதில் மயிலை கற்பகாம்பாள் சந்நிதியில் ஜெயகுமாரியின் முதல் கச்சேரி அரங்கேற்றமாயிற்று. நகரில் அத்தனை சபாக்களின் காரியதரிசிகளையும், பிற இசை உலக விற்பன்னர்களையும் வரவழைத்து அரங்கேற்றத்தைச் சிறப்பாக நடத்தினார் கல்யாணசுந்தரம். இனிய குரலும் நல்ல பயிற்சியும், சுயமான கற்பனா சக்தியும் இருந்தமையால் ஜெயகுமாரியின் பாட்டை அன்று எல்லோரும் ஒருமுகமாகப் பாராட்டினர். அவ்வளவுதான்; அவளுக்கு மார்க்கெட் பிடித்து விட்டது. முதலில் சென்னையிலும், பிறகு ரேடியோ சான்ஸ் மூலம் வெளியூர்களிலுமிருந்தும் அவளுக்கு அழைப்புக்கள் வரலாயின.

கடந்த நான்கு ஆண்டுகளாக ஒரு நல்ல பாடகி என்ற பெயரை அவள் நிலைநாட்டி வந்தாள். ஆனால் எந்தக் கச்சேரியாகட்டும்; அது முடிந்ததும் முடியாததுமாக அவள் தன் தந்தையிடம் அபிப்பிராயம் கேட்கத் தவற மாட்டாள். அவரும் பாராட்டுத் தெரிவிக்க வேண்டிய அயிட்டங்களைப் பாராட்டுவார்; குறை தென்பட்டால் அவற்றைச் சுட்டிக் காட்டி, இப்படிப் பாடியிருக்க வேண்டும் என்று திருத்துவார்.

இன்றும் அப்படித்தான். அவர் மோகனுடன் மேடைக்குச் சென்றதும், ஜெயகுமாரி ''எப்படியப்பா பாடினேன்?'' என்று கேட்டாள்.

''எல்லாம், வீட்டுக்குப் போய் விவரமாய்ச் சொல்றேம்மா'' என்றார் அவர்.

''ஏம்ப்பா?''

''இன்னைக்கு ஒன் கச்சேரியை நான் அவ்வளவு நுணுக்கமாக் கவனிக்கலை!''

''காரணம்?''

''சார்கிட்டே நீ பண்ணின வேடிக்கை என் மனசை வேதனைப்படுத்திடிச்சு, ஜெயா. அவர் யார் தெரியுமா? ஒரு பெரிய இடத்துப் பிள்ளை. ஒரு பெரிய ஆர்க்கிடெக்ட்; கண்டிராக்டர்!''

கல்யாணசுந்தரத்தின் குரலில் அப்பொழுது தொனித்த தீவிரம் மோகனை அவர்களுடைய பேச்சில் புகச் செய்தது. ''என்ன சார் நீங்க, சின்ன விஷயத்தை யெல்லாம் பெரிசுபடுத்திக்கிட்டு?'' என்றான் அவன்.

''இல்லை, மிஸ்டர் மோகன். என்னதான் என் பெண் வயசிலே சின்னவளா யிருந்தாலும் வேடிக்கைக்கும் விளையாட்டுக்கும் ஒரு லிமிட் வேணுமில்லையா?...'' அவர் மேலும் ஏதோ கூற வாயெடுத்தார். அதற்குள் சபா காரியதரிசி அங்கே வந்து, ''கல்யாணசுந்தரம் சார், ஒரு நிமிஷம் என்று கூறி அவரை மேடையின் பக்கவாட்டில் இருந்த ஆபீஸ் அறைக்கு அழைத்துச் சென்று விட்டார்.

அவர் போனதும், ஜெயகுமாரி முகத்தில் விசனம் தேங்க, ''என்னை மன்னிச்சிடுங்க சார்!'' என்றாள்.

''மன்னிக்கிறதா? எதுக்கு?'' என்று கேட்டான் மோகன்.

''நான் அந்த அளவுக்கு ஒங்ககிட்டே உரிமை எடுத்துண்டதுக்கு?''

''பரவாயில்லை, மிஸ் ஜெயகுமாரி. உண்மையைச் சொல்வதா யிருந்தா இந்த மாதிரி வேடிக்கைகள் எனக்கு ரொம்பப் பிடிக்கும்.''

''ஆண் பிள்ளைகள் வேடிக்கை பண்ணினாலா? பெண்பிள்ளைகள் வேடிக்கை பண்ணினாலா?'' என்று அவள் முறுவலுடன் கேட்டாள்.



''பார்த்திங்களா? மறுபடியும் ஆரம்பிச் சுட்டீங்களே!''

''ஒங்களுக்குத்தான் இந்த மாதிரி வேடிக்கைகள் பிடிக்கும்னு சொன்னீங்களே!'' அவள் முத்துப் பற்கள் தெரியச் சிரித்தாள். மோகனும் சிரித்தான்.

''அது சரி; கச்சேரி எப்படி இருந்திச்சு?''

''ஏ ஒன்! ஒங்கப்பா அடுத்து நடக்கப் போற ஒங்க கச்சேரிகள் பத்தி ஒரு லிஸ்ட் குடுத்து எல்லாத்துக்கும் சேர்த்து ஒரேயடியா இன்விடேஷனும் குடுத்திட்டார்.''

''வருவீங்க இல்லே?''

''வராம இருப்பேனா?''

''அதோடு என்னோடு பெர்சனல் இன்விடேஷன் ஒண்ணு.''

''என்ன?''

''எங்க வீட்டுக்கு ஒருநாள் நீங்க வரணும்.''

''டு லேட். அந்த அழைப்பும் ஒங்கப்பா கிட்டேயிருந்து ஏற்கனவே வந்தாச்சு.''

''பொல்லாதவர் இந்த அப்பா!''

பொல்லாத அந்த அப்பா அச்சமயம் திரும்பிவிடவே அவர்கள் உரையாடல் முற்றுப் பெற்றது.

அன்று அவர்களைத் தன் காரிலேயே மந்தைவெளிப்பாக்கத்தில் வெஸ்ட் சர்க்குலர் ரோட்டிலிருந்த அவர்கள் வீட்டில் கொண்டு இறக்கி விட்டுச் சென்றான் மோகன். வாக்களித்தபடி ஓர் ஞாயிற்றுக் கிழமை அவர்கள் வீட்டுக்குக் காலையிலேயே புறப்பட்டுப்போய், அங்கேயே சாப்பிட்டுவிட்டு, மாலைவரையில் தங்கி பரஸ்பரம் குடும்ப விஷயங்களைப் பற்றியும், சங்கீதம் பற்றியும் பேசிக் கொண்டிருந்தான்.

அத்துடன் நகரில் நடக்கும் அவளுடைய கச்சேரிகளுக்குத் தவறாமல் ஆஜரானான். கச்சேரி முடிந்ததும் அவர்களை வீட்டில் கொண்டு விட்டு விட்டுச் சென்றான். சில தினங்களுக்குப் பிறகு கச்சேரி நாட்களில் பிற்பகலிலேயே அவர்கள் வீடு சென்று சபாவுக்கோ, மற்ற இடங்களுக்கோ அவர்களைக் காரில் ஏற்றிச் செல்வதையும் வழக்கமாக்கிக் கொண்டான். ஜெயகுமாரியின் பெரும்பாலான கச்சேரிகள் ஞாயிற்றுக் கிழமைகளிலேயே நடந்ததால் தன் வேலைக்கு இடையூறு இல்லாமல் போய் வருவதற்கு அவனுக்கு வசதியாக இருந்தது.

அடிக்கடி நிகழ்ந்த இந்தச் சந்திப்பு, ஜெயாவையும் அவனையும் மிக நெருக்கத்துக்குக் கொண்டு வந்து, ஒருவரையொருவர் நன்றாகப் புரிந்து கொள்ளச் செய்தது. ஓர் ஞாயிற்றுக் கிழமை ஜெயாவுக்கு வேலூரில் ஒரு கல்யாண ரிஸப்ஷனில் கச்சேரி. அன்று காலையில் கல்யாணசுந்தரத்துக்குக் கடுமையான ஜுரம் வந்து விட்டதால், அவள் மோகனுக்கு டெலிபோன் பண்ணி அன்றைய கச்சேரிக்குத் தனக்குத் துணை வருமாறு கேட்டுக்கொண்டாள். சாதாரணமாக இத்தகைய வெளியூர்க் கச்சேரிகளுக்குப் பக்கவாத்தியக்காரர்கள் கூடவே தாங்களும் செல்வதுதான் அவர்கள் வழக்கம். ஆனால் அன்று மோகன் அவளைத் தன் காரிலேயே வேலூருக்கு அழைத்துப் போவதாக ஃபோனில் கூறியதால் அதே காரில் பக்கவாத்தியக்காரர்கள் வருவதை அவன் விரும்புவானோ, மாட்டானோ என்ற சந்தேகத்தில் கல்யாண சுந்தரம் பக்க



வாத்தியக்காரர்களை முன்னதாக பஸ்ஸில் புறப்பட்டுச் சென்றுவிடுமாறு செய்தி சொல்லி அனுப்பி விட்டார்.

அவர்களிடையே பழக்கம் ஏற்பட்டு ஏறக் குறைய ஓராண்டு காலம் ஆகிவிட்ட போதிலும், இன்றுதான் ஜெயாவும் மோக னும் தனியாக ஓர் இடத்துக்குப் போகும் வாய்ப்புக் கிட்டியது. அந்த வாய்ப்பை இருவருமே மனம் விட்டுப் பேசுவதற்குப் பயன் படுத்திக் கொண்டனர். அவர் களிடையே காதலைப் பற்றிய பரிமாற்றம் ஏற்பட்டதும் அன்றுதான். ஜெயாவின் மன நிலை தெள்ளத் தெளிவாகிவிட்ட பின் மோகன் மேல் நடவடிக்கையில் இறங்கினான்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை மந்தைவெளிக்கு வந்து கல்யாணசுந்தரத்திடம் ஜெயாவைத் தான் மணக்க விரும்புவதாகத் தெரிவித்தான்.

''இது நான் எதிர்பார்த்த ஒன்றுதான்'' என்று பனிச்சென்று கூறிய அவர், ''ஆனால்?'' என்று ஒரு கேள்விக் குறி போட்டு நிறுத்தினார்.

''சொல்லுங்க'' என்று மோகன் அவரை ஊக்கினான்.

''ஒங்க அம்மா—அப்பா சம்மதம் கிடைக் கும் என்கிற நம்பிக்கையோடுதான் நீங்க இந் தக் கோரிக்கையை வெளியிட்டிருப்பீங்கன்னு நெனைக்கிறேன். ஆனால் நான் போடற நிபந் தனை ஒன்னுக்கு நீங்களும், ஒங்க அப்பா—அம்மாவும் கட்டுப்படுவீங்களா என்கிறது தெரியணும்.''

''என்ன நிபந்தனைன்னு சொல்லுங்க.''

''பரம்பரை பரம்பரையாச் சங்கீதத்தைத் தொழிலாகக் கொண்ட குடும்பம் எங்க குடும் பம்: என் தலைமுறையோடு அது அழிஞ்சிடக் கூடாதுன்னுதான், ஜெயா பெண்ணாக இருந்த போதிலும் சங்கீதத்தைக் கற்றுக் கொடுத்து அவளை அந்தத் துறையிலே ஈடுபடுத்தியிருக் கேன். அதனாலே கல்யாணத்துக்கு அப்புற மும் அவள் கச்சேரி செய்வதற்கு நீங்களும் ஒங்க அப்பா—அம்மாவும் மனப்பூர்வமான சம்மதம் தரணும்.''

''என்வரையில் என் சம்மதத்தை இப் பவே கொடுத்திடறேன். எங்கப்பா—அம்மா வின் சம்மதத்தையும் பெற்றுக்கிட்டு ஒங்களை வந்து சந்திக்கிறேன்'' என்று கூறிவிட்டு, மோகன் அடுத்த ஞாயிற்றுக் கிழமை வேலவ னூருக்குப் புறப்பட்டு வந்தான். பெற்றோ ரிடம் எல்லாவற்றையும் ஒளிவுமறைவின்றித் தெரிவித்தான்.

''கச்சேரிதானே? செய்தா செய்துக்கிட்டுப் போகட்டுமே! என்னங்க? நீங்க என்ன சொல்றீங்க?'' என்று கனகம் தன் கண வரைக் கேட்டாள்.

''சினிமாவுக்குக் கினிமாவுக்குப் போய்ப் பாட்டுப் பாடுவேன்னு பிடிவாதம் பிடிக்காத வரையிலே எனக்கு ஆட்சேபனை ஒன்னும் இல்லை. ஆனால் அவுங்க குடும்பம், குலம், கோத்திரம் இவற்றையெல்லாம் விசாரிக்கத் தெரிஞ்சுக்க வேண்டாமா?'' என்றார் ஜக நீசன்.

''அவங்க அப்பழுக்கு இல்லாத சங்கீத வித்வான்களின் பரம்பரையைச் சேர்ந்த வங்க, அப்பா. எனக்கு அது நல்லாத் தெரி யும். இருந்தாலும் ஒங்க மனச் சமாதானத் துக்கு நீங்களும் நல்லா விசாரணை பண்ணிக் கிட்டுச் சம்மதம் குடுங்க, போதும்'' என்றான் மோகன்.

இரண்டு — மூன்று வருஷங்களாகவே தன் னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி தாய் நேரடியாகவும், தந்தை மறைமுக மாகவும் வற்புறுத்தி வந்ததால், ஜெய குமாரியை மணக்க அவர்கள் தடை சொல்ல மாட்டார்கள் என்ற உறுதி மோக னுக்கு உண்டு. ஆனால் கல்யாணத்துக்குப் பிறகு ஜெயாவைக் கச்சேரிகள் செய்ய அவர்கள் அனுமதிப்பார்களா என்பது அவ னுக்குச் சிறிது சந்தேகமாகவே இருந்தது. இதற்கு அவர்களைச் சம்மதிக்கச் செய்ய, தான் கொஞ்சம் போராட வேண்டி யிருக்கும் என்று கூட அவன் நினைத்தான்.

ஆனால் அவன் நினைத்ததற்கு மாறாக அந்தப் பிரச்னை சுலபமாகத் தீர்ந்து விட்டது. குலம்—கோத்திரம் பற்றிய அவர்களுடைய விசாரணை சாதகமாகவே அமையும் என்பதில் அவனுக் குச் சிறிதும் ஐயமில்லை.

எனவே, தான் வந்த காரியம் நூற்றுக்குத் தொண்ணூறு வெற்றி யடைந்து விட்ட களிப்புடனும், தானும் ஜெயாவும் வருங் காலத்தில் நடத்தப் போகும் இன்பமயமான இல்லற வாழ்வு பற்றிய கற்பனைகளுடனும் அன்றிரவு வேலவனூரில் உறக்கத்தில் ஆழ்ந்தான்.

அந்த உறக்கத்தில்தான் தங்கள் தேனிலவு பற்றிய அந்த இனிய கனவைக் கண்டான். ஆனால் என்ன பயன்? வெறும் கனவுதான்— என்றாலும் அது கூட கவையான கட்டத்தில் கலைக்கப்பட்டு விட்டதே! (தொடரும்)



ராஜஸ்தானைச் சேர்ந்த பன்வர்லால் குமாவத் என்பவர் அரிசியில் எழுத்துக்கள் எழுதும் நிபுணர்.

650 ஆண்டுகளுக்கு முன் 85 எழுத்துக்கள் ஒரே ஒரு அரிசியில் எழு தப்பட்டு 11,000 டாலர்களுக்கு விலை போனதாகக் கேள்விப்பட்ட இவர் 1955ல் இக்கலையை ஆரம்பித்தார். கடும் உழைப்பும், நேர்மையும் கொண்ட இவர் இக்கலையில் ஐந்து வருடங்களில் முழுத் தேர்ச்சி பெற்றார். ராணி எலிசபெத் 1960ம் ஆண்டு இந்தியாவிற்கு வருகை தந்தபோது எழுத்துக்கள் எழுதப்பட்ட ஓர் அரிசியைப் பரிசாக அளித்தார்.

ஒவ்வொரு அரிசியிலும் 365 எழுத்துக்கள் வீதம் பகவத்கீதையில் உள்ள 700 சுலோகங்களை 90 அரிசிகளில் எழுதி உலக சாதனை புரிந்த இவர், பணியாற்றும்போது சக்தி வாய்ந்த கண்ணாடி எதுவும் அணிவ தில்லை. தமது இந்தக் கலைக்கு இந்தியாவில் வரவேற்பு இல்லாவிடினும் அமெரிக்காவில் பெரும் வரவேற்பு இருப்பதாகக் கூறுகிறார் இவர்.

ஆதாரம்: ''விஸ்டம்'' — அ. ரா.

# வாங்கிச் செல்வீர் ஒரு பிரஸ்டீஜ்

# Prestige

## – அதன் கால்பங்கு விலையிலே!




மீதியை 8 மாதங்களில் 6 தவணைகளில்
நீங்கள் செலுத்த லக்ஷ்மி விலாஸ் பாங்க்
லிமிடெட் உங்களுக்கு உதவுகிறது

LVB

அறுபது சதவிகிதத்திற்கும் கூடுதலாக எரிபொருள் செலவை சேமித்துத் தருவதால் ஏறக்குறைய உங்கள் தவணைத் தொகையை பிரஸ்டீஜே சம்பாதித்துத் தருகிறது!

தற்சமயம் இச்சலுகை தமிழ்நாடு, பாண்டிச்சேரி, ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம் மற்றும் கேரளம் ஆகிய மாநிலங்களில் லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்டின் கிளைகள் உள்ள இடங்களில் கிடைக்கிறது.

மேலும் தகவல்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள பிரஸ்டீஜ் டீலரை அணுகுங்கள்.

வாங்கிடுவீர் Prestige வாழ்வில் சுவைகூட்டிடுவீர்

டிடி. (பிரைவேட்) லிமிடெட்
பெங்களூர் 560 016

SAA/TTP/2631



பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட, இனிய எளிய நடையில் எழுதிய அருளரசி அமரர் **ஹரா. வி. வாலம்** அம்மையாரின் சமஸ்கிருதத்தில் இருந்து செய்யுள் வடிவில் தமிழாக்கம் செய்யப்பட்ட பக்தி நூல்களை பாராயணம் செய்து எல்லா நலன்களையும் பெற நல்வாய்ப்பு.

1. ஸ்ரீ பால பகவத் கீதை 3-25
2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் 1-00
3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 1-50
4. ஸ்ரீ சௌந்தர்ய லஹரி 1-00
5. ஸ்ரீ சிவானந்த லஹரி 1-50
6. ஸ்ரீ தேவி மகாத்மியம் 5-00
7. ஸ்ரீ நாரதர் பக்தி சூத்திரம் 1-30
8. ஸ்ரீ கிருஷ்ண கர்ணாமிர்தம் 4-00
9. ஸ்ரீ பாகவதம் (தசமஸ்கந்தம்) 5-00
10. ஸ்ரீ வேங்கடவன் திருமலைப் பாடல்கள் 1-00
    *(சொந்தப் பாடல்கள்)*

**திருமதி ஹரா. பார்வதி** எழுதிய பக்தி நூல்

11. ஸ்ரீ நாராயணீயம் 5-00
    (செய்யுள் வடிவில் மொழிபெயர்ப்பு)

**ஹரா. வி. வாலம்** அவர்களின் மற்றைய நூல்கள்

12. காந்தியம் கமழுகின்ற ''மோகன முறுவல்'' 2-00
13. பாரதத்தின் வளப்பான ஸ்தலங்கள் பற்றிய ''மோகன முரளி'' 3-25
14. *(பாரதத்தின் புகழ் பாடும்)* பாரத சுப்ரபாதம் 2-00
15. "THE VOW OF PANCHALI" 3-25
    (மகாகவி பாரதியின் பாஞ்சாலி சபதத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு)
16. மோஹன மாதுர்யம் 3-00
    (ஸம்ஸ்கிருத ஸ்தோத்திரங்கள்)

கர்மயோகி **திரு பி. எஸ். கிருஷ்ணஸ்வாமி** எழுதிய

17. ''கடல் துளி'' (கவிதைத் தொகுதி) 3-25
18. THOUGHT PROVOKING "SEA DROPS" ENGLISH TRANSLATION OF கடல் துளி 3-25
19. COMBINED EDITION IN ENGLISH AND TAMIL 5-50

**நூல்கள் கிடைக்குமிடங்கள்:**

1. ஹிக்கின்பாதம்ஸ், மவுண்ட் ரோடு, சென்னை-600 002
2. சப்தகிரி புக் ஷாப், ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-600 017
3. தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1-140, பிரகாசம் சாலை, சென்னை-600 001
4. ஸ்காலர்ஸ் புக் ஹவுஸ், ரங்கநாதன் தெரு, சென்னை-600 017
5. கபாலி புக் சென்டர், லஸ், சென்னை-600 004
6. நேரு புக் சென்டர், லஸ், சென்னை-600 004
7. விஜயா ஸ்டோர்ஸ், 28, தென் மாட வீதி, சென்னை-600 004
8. கிரி டிரேடிங் ஏஜன்ஸி, கபாலீசுவரர் கோயில் அருகில், மயிலை, சென்னை-600 004

மற்றும் எல்லா பிரபல நூல் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

*விரைவில் வெளிவரவிருக்கும்* திருமதி ஹரா. வி. வாலம் அவர்களின் இதர நூல்கள்:

1. இராமாயண ரத்னாகரம் (கம்பர், துளஸி, வால்மீகி ஒப்பு நோக்கு நூல்) ரூ. 10-00
   விற்பனை உரிமை (வானதி பதிப்பகம், சென்னை - 17)
2. पाञ्चाली की शपथ பாஞ்சாலி கீ சபத்
   (மகாகவி பாரதியின் பாஞ்சாலி சபதத்தின் ஹிந்தி மொழிபெயர்ப்பு)

**நூல் நிலையங்களுக்கு விசேஷ சலுகை உண்டு**

---

**" அறிஞர்கள் நெஞ்சில் ஹரா. வி. வாலம் "**

ஹரா. வி. வாலம், 55வது பிறந்த நாள் விழாவை ஒட்டி 24, ஆகஸ்ட், 1977ல் வெளிவருகிறது
எழுத்தாளர்கள், கவிஞர்கள், அறிஞர் பெருமக்கள் கவிதை, கட்டுரைகள் வழங்கி உதவ வேண்டுகிறோம்
தொகுப்பாசிரியர்: ''பாரதி அடிப்பொடி'' வி. எஸ். மணி, பதிப்பாசிரியர்: பி. எஸ். கிருஷ்ணஸ்வாமி

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**திரு. பி. எஸ். கிருஷ்ணஸ்வாமி**
"மோகன"
46-A, கல்வி வாருத் தெரு - தொலை பேசி: 77495 - மயிலாப்பூர், சென்னை-600 004



# ஒரு வேண்டுகோள்

மார்ச்சு மாதத்தில் நடைபெற்றதான வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த லோகசபைத் தேர்தலின்போது **ஜனதா கட்சிக்காக** உழைத்தவர்களின் நினைவில் பெருமதிப்புக்குரியதாக நிலைத்து நிற்பது, தேர்தல் கூட்டங்களிலும், வீடு வீடாகவும் கொண்டு செல்லப்பட்ட தட்டுக்களிலும், கலயங்களிலும் சிறு தொகை மதிப்பு வாய்ந்த பண நோட்டுக்களும் சில்லறைகளும் வந்து குவிந்துகொண்டே இருந்ததுதான். காங்கிரஸ் கட்சி பெரிய பணக்காரர்களிடமிருந்து பெற்றதான கோடிக்கணக்கான ரூபாயைக் காட்டிலும் இத்தகைய சிறு நன்கொடைகளின் மதிப்பளவு எவ்வளவோ உயர்ந்தது என்பதைத் தேர்தல் முடிவுகள் காட்டிவிட்டன. ஒவ்வொரு ரூபாயும், ஒவ்வொரு பைசாவும் மாறுதல் வேண்டும் என்ற மக்களின் விருப்பத்தைப் பிரதிபலித்தன; வரப்போகும் அரசாங்கத்திடமிருந்து சலுகைகளை எதிர்பார்த்துச் செய்த முதலீடுகள் அல்ல அவை.

இது நமது ஜனநாயக நடைமுறைகளில் ஏற்பட்டுள்ள ஜீவாதாரமானதொரு முன்னேற்ற நிலையைப் பிரதிபலித்தது. தேர்தல்களில் வெல்வதற்குக் கொழுத்த அளவில் பணம் இருப்பது அத்யாவசியம் அல்ல என்பதை நமக்கும் வெளி உலகுக்கும் நிரூபித்துக் காட்டியது இது. உரிமை இழந்து கிடந்தவர்களும் நாங்கள் போற்றிக் காத்திடத் தீர்மானித்திருந்தவர்களுமான பெருந் திரளான ஏழை எளிய மக்களுக்கும் ஜனதா கட்சிக்கும் இடையில் சிறப்புப் பிணைப்பு ஒன்றையும் ஏற்படுத்திக் கொடுத்தது அது.

ஆகவே, நாங்கள் அதிகார பீடத்தில் இருந்தபோதிலும்கூட, வெளி வரப் போவதே இல்லாத ''சிறப்பு மலர்''களில் பிரசுரிப்பதற்கான விளம்பரங்கள் என்ற போர்வையில் லட்சக் கணக்கான ரூபாய்களைக் கொட்டிக் கொடுக்க வேண்டும் என்று பெரிய வர்த்தக நிறுவனங்களைக் கேட்கக் கருதவில்லை. அதற்குப் பதிலாக நன்கொடைகள் கேட்டு நாங்கள் மறுபடியும் மக்களுக்கே வேண்டுகோள் விடுக்கிறோம்.

காலம் மிகக் குறுகியதாக இருக்கும் காரணத்தால், செல்வர்கள், ஏழை, எளியவர்கள் ஆகிய இருதிறத்தாரும் உடனடியாக நன்கொடைகள் வழங்க வேண்டுகிறோம்.

நன்கொடைகள் அனைத்தும், '**ஜனதா கட்சி, 7, ஜந்தர் மந்தர் ரோடு, புதுதில்லி**' விலாசத்துக்கோ அல்லது **தில்லி**, பம்பாய், **அஹமதாபாத், சென்னை, மதுரை, பெங்களூர், விஜயவாடா, கொச்சி** மற்றும் **ஹைதராபாத்தில்** உள்ளதான **''இந்தியன் எக்ஸ்பிரஸ்''** அலுவலகம் எதற்குமோ அனுப்பப்படலாம். **யுனைடெட்** கமர்ஷியல் பாங்கின் எல்லாக் கிளைகளிலும்கூட நன்கொடையைச் செலுத்தலாம்.

ரூ. 100க்கு மேற்பட்ட நன்கொடைகளின் வரவு 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகையில் பிரசுரிக்கப்படும். அநாமதேய நன்கொடைகள் எதுவும் அவ்வாறே கணக்கில் வைக்கப்படும். எல்லா நன்கொடைகளும் புதுதில்லியில் உள்ள ஜனதா கட்சிக்கு உடனே மாற்றப்படும்.

**சந்திரசேகர்,**

தலைவர், ஜனதா கட்சி.

கிழக்குக்' கோபுரத்துக்கு எதிரே, கிழக்கு சித்திரை வீதிக்கும் கிழக்கு மேல ஆவணி மூல வீதிக்கும் இடையில் அமைந்துள்ள மண்டபம்தான், புது மண்டபம். 333 அடி நீளம், 105 அடி அகலமுள்ள மண்டபத்தில் 25 அடி உயரமுள்ள 124 தூண்கள் உள்ளன. மண்டபத்தின் மேற்குப்புறத் தூண்களில் கண்ணைக் கவரும் சிற்பங்கள் பல உள்ளன.

மதுரைக்குச் செல்கிறவர்கள், பார்த்து ரசிக்க வேண்டிய இடம்.

## 23

சீதாமணிக்குத் தலைகால் புரியவில்லை. அன்று அதிகாலையிலேயே எழுந்து குளித்து விட்டுப் பழைய பட்டுப் புடவையை (பிள்ளை கந்து கர்ம சிரத்தையுடன் இஸ்திரி போட்டுக் கொடுத்திருந்தான்) கட்டிக் கொண்டாள். மீனாட்சி குங்குமத்தை, என்றும் காட்டும் அவசரமில்லாமல் ஒரு நிதானத்துடன் இட்டுக் கொண்டு மீண்டும் ஒரு தடவை கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தாள். கன்னத்தின் மஞ்சள் ஒரு பிரகாசத்துடன் விளங்குவதாகத் தோன்றியது. காதின் பழைய சிவப்புத் தோடு மங்கலில் பல்லே இளித்ததை அவள் லட்சியம் செய்யவில்லை. கன்னம் நிறைய மஞ்சள். நெற்றியில் மீனாட்சி குங்குமம். கழுத்தில் தொங்கும் மஞ்சள் சரடு வேறு என்ன வேண்டும் அவளுக்கு?

திடீரென்று முந்தின நாள் சாயங்காலம் நீலா கொண்டு வந்த மல்லிகைப் பூவின் நினைவு வந்தது. வக்கீல் ராமையா வீட்டுத் தோட்டத்தில் வீணாகப் போகும் பூ. நீலா ஒய்வு வேளையில் நெருக்கமாகத் தொடுத்து நான்கு முழம் கொண்டு வந்திருந்தாள். மறு நாள் எல்லோரும் சூடிக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் ஓர் ஈரத் துணியில் பொதிந்து வைத்திருந்தாள்.

சீதாமணி அதை எடுத்தாள். துணி நன்றாகக் காய்ந்து போயிருந்தது. அதை லட்சியம் செய்யாமல், அறையெல்லாம் மணம் பரப்பும் பூவை எடுத்துத் தலையில் சூடிக்கொண்டாள்.

தலையை வாரிக்கொண்டே, அம்மாவின் செய்கை அனைத்தையும் கவனித்த லாவண்யாவுக்குச் சிரிப்பதா அழுவதா என்றே புரியவில்லை. ஒரு விசேஷமும் இல்லாத அன்று அம்மா பட்டுப் புடவையைக் கட்டிக்கொள்ளுகிறாள். அலட்சியமாகக் குங்குமத்தை இட்டுக் கொண்டு, சமையலைக் கவனிக்க ஓடுகிறவள் இன்று ஒரு தடவைக்கு இரு தடவையாகக் கண்ணாடியைப் பார்க்கிறாள். தனக்குத்தானே சிரிக்கிறாள். எல்லாவற்றுக்கும் முத்தாய்ப்பாகப் பூவை எடுத்துச் சூடிக்கொள்ளுகிறாள். என்றுமே அவள், வேண்டாம் என்று சொல்லக் கூடாது என்ற ஒரே காரணத்துக்காகச் சரத்திலிருந்து ஒரே ஒரு பூவைக் கிள்ளிச் செருகிக் கொள்ளுகிறவள் ஒரு முழத்தை இன்று சூடிக்கொள்ளுகிறாளே?

தன்னைத் தன் பெண் கவனித்து விட்டாள் என்பதை உணர்ந்துவிட்ட சீதாமணி, ''சங்கரி!'' என்று அழைத்தாள். பெண் தன்னைப் பற்றித் தப்பாக நினைக்கக் கூடாது என்று அவள் மனம் தாபப்பட்டது.

''என்ன அம்மா?''

''இன்னிக்கு என்ன டியூட்டி இருக்கா?''

''இல்லே.''

''பின் ஏன் எதுக்கு இவ்வளவு சீக்கிரம் எழுந்து தலை வாரிக்கறே?''





''ஏழரை மணிக்கு ஓர் இண்டர்வ்யூ இருக்கு.''

''இண்டர்வ்யூவா ? அதுவும் ஏழரை மணிக்கா?''

''ஆமாம். மொட்டை ஏற்பாடு பண்ணி யிருக்கான்.''

''என்ன வேலே?''

''தெரியாது.''

''என்ன வேலேன்னு தெரியாமயா இண் டர்வ்யூவுக்குப் போறே?''

''ஆமாம்.''

''மொட்டை பேச்சைக் கேட்டுண்டு ஏடா கூடமா எதிலேயும் மாட்டிக்காதே.''

''சரி.''

''வர வர எனக்கு அவனைப் பத்திய அபிப் பிராயமே மாறிண்டு வர்றது.''

''எனக்கும்தான்.''

''பூர்ணத்தை ஜோட்டாலே அடிப்பேன்னு பயமுறுத்தினனும்.''

''அடிக்கலேயா?''

''என்னடி சொல்றே ....? நீ என்ன சொல்றே?''

''மொட்டை வார்த்தை தவற மாட்டா னேங்கற எண்ணத்திலே கேட்டேன் ..''

''பரோபகாரின்னு ஊரிலே இத்தனை நாளா வேஷம் போட்டுண்டிருக்கான்.''

''பரோபகாரி இல்லேம்மா. பக்தன்.''

''பக்தனு? என்னடீ சங்கரி உளர்றே... என்னிக்கு மொட்டை பக்தனு மாறினன்?''

''ஓ. நீ மொட்டையைப் பத்திப் பேசறயா?''

''நீ யாரைப் பத்திப் பேசினே?''

''உன் ஒண்ணு விட்ட அண்ணு பிள்ளை. பேரு சரியாத்தான் வைச்சிருக்கா... பூர்ணம். உள்ளே ஒண்ணு... அதைப் போர்த்திண்டு வெளியே தெரியறது இன்னொண்ணு...''

''அவனைப் பத்தித் தூஷணையாப் பேசா தேடீ சங்கரீ... அவன் இந்தக் குடும்பத்துக்கு என்னென்ன செய்யறுங்கறதை நீ இன்னும் புரிஞ்சுக்கலே.... நாளைக்கு ராத்திரி பாண்டி யனிலே நானும் அப்பாவும் மெட்ராஸ் போறோமே, அதுக்கு அவன்தாண்டி மூல காரணம்.''

''சோழியன் குடுமி சும்மா ஆடாது.''

''ஏண்டி அப்படிச் சொல்லறே?''

''நீ வெறும் அத்தையா மட்டும் இருந்தால் போராது அவனுக்கு! மாமியாராகவும் வரணும்.''

''அப்படீன்னு?''

''நீலாவைப் பண்ணிக்கணும்னு மனசிலே ஓர் ஆசையை வைச்சுண்டு, வெளியே திரு ஞான சம்பந்தர் வேஷம் போடறுன்.''

''டீ சங்கரீ... நீ இப்ப சொல்றது நிஜம்னு, இன்னிக்கே அந்த மீனுட்சிக்கு ஓர் அர்ச்சனை பண்ணிட்டு வரேண்டி...கை நிறையப் பணம். நல்ல வேலே. ஆள் ராஜா வாட்டம் இருக்கான்... நீலா கொடுத்து வைச்சிருக்காள்.''

''நீலாவும் சரின்னு பூர்ணம் மாப்பிள்ளை. ஏன் கவலேப்படறே?''

''டீ சங்கரீ... அவன் என்ன சொன்னுன் தெரியுமாடீ! 'அத்தே! அத்திம்பேரோடு உசிர் பணம் இல்லாத காரணத்தாலே போயிடு மோன்னு நீங்க லவலேசமும் கவலேப்படாதே யுங்கோ... பாங்கிலே இருபதாயிரம் இருக்கு. பிராவிடண்ட் பண்டிலே பத்தாயிரம் இருக்கு. மெட்ராஸ்லே என்னேடே ஐயப்பன் பஜனை யிலே பாடாத பெரிய டாக்டர் இல்லே... உங்க மஞ்சக் குங்குமத்துக்கு நான் 'ஜவாப்' அப்படீன்னுன். எனக்கு உடம்பெல்லாம் புல் லரிச்சுப் போச்சு!''



''நீலா விலே உசந்த குதிரை தான் அம்மா. ஏம்மா இப்படி ஓர் ஏமாளியா இருக்கே. ஒரு சாதாரண அத்தை யாலே, தினசரி சோத்துக்கே கஷ்டப் படற அத்தையாலே அவனுக்கு என் னம்மா உபயோகம்? இத்தனை வருஷமா இல்லாத சொந்தமும் பந்தமும் பரிவும் பாச மும் ஏம்மா திடீர்னு அவன்கிட்டே உண்டா கணும்? அவன் காரண காரியத்தோடே நடிக் கிறன், அம்மா... தயைசெஞ்சு நீயும் அப்பா வும் அவன் வீட்டிலே இருக்காதீங்கோ...''

''மூடுடி வாயை...அவன் வீட்டிலே இறங் காமப் பிளாட்பாரத்திலே இறங்கச் சொல்றியா?''

''பூர்ணம் வீட்டை விட மெட்ராஸ் பிளாட்பாரமே தேவலே அம்மா!''

''பெத்த அப்பனேடு வைத்தியத்துக்காக ஒரு பைசா தரத் துப்பு இல்லே... நீ பேசறே! என்ன வாய் இருந்தாநீ இப்படிப் பேசுவே?''

ஏற்கனவே நாலாயிரத்து இருநூறு ரூபா யைப் பாங்கிலிருந்து எடுத்துத் தயாராக வைத்தாகி விட்டது என்று சொல்லலாமா என்று நினைத்தாள் லாவண்யா. அடுத்த கணமே எண்ணத்தை மாற்றிக் கொண்டாள். பாண்டியன் எக்ஸ்பிரஸில் அம்மாவும் அப்பா வும் உட்கார்ந்திருக்கிறர்கள். முதல் மணி அடித்தாகி விட்டது. அம்மா என்னென்

ளவோ பேசுகிறாள். அப்பா மௌனமாக, தம் இயல்பில் வெளிச்சத்தில் தெரியும் சூனியத்தை ஊடுருவிப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருக்கிறார். இரண்டாவது மணி அடிக்கிறது. இன்னும் சில விநாடிகளில், பாண்டியன் ஒரு கம்பீரத்துடன் புறப்படு வான். அந்த வேளையில் — அந்தக் கட்டத் தில் — லாவண்யா, தான் எப்பேர்ப்பட்ட பெண் என்பதைப் பெற்றோருக்குக் காட்டு வாள். 'அம்மா! இதிலே நாலாயிரத்து இரு நூறு இருக்கு. அப்பாவோடு வைத்தியத் துக்கு என்னோடு காணிக்கை!' என்று அவள் கூறுவாள். அப்புறம் அம்மா இரவெல்லாம் தூங்காமல், தன் பெண் 'சங்கரி'யைப் பற்றியே நினைத்துக் கொண்டு போவாள்.




இப்போதே பண விஷயத்தை வெளியிட்டு விட்டால், நாளைக்குப் பிரிவுபசாரம் 'சப்' பென்று போய்விடும். அம்மா பணத்தை இன்றே வாங்கிக் கொண்டால், வாய் வார்த்தையாக இரண்டொரு நன்றி வார்த் தைகளை உதிர்த்துவிட்டுப் பிரயாண காரியங் களில் முனைந்து விடுவாள். அவள் பணம் கொடுப்பதும், அம்மா வாங்கிப்பதும் சாதா ரண சம்பவங்களாகி விடும். அம்மாவின் மனத்தில் அவள் ஒட்டிக் கொள்ளமாட்டாள். நாளைக்கு நடக்கும் நாடகத்துக்குப் பிறகு சிதாமணி என்னும் தாயாரின் மனத்தில் ஒரு புதுப் பெண்ணே பிறக்கப் போகிறாள்!

இந்த வாய்ப்பை லாவண்யா இழக்கக் கூடாது.

''அம்மா!'' கூப்பிட்டபிறகுதான், அம்மா அங்கே இல்லை என்பதை லாவண்யா உணர்ந் தாள். அவள் தன்னுள் லயித்துக் கொண் டிருக்கையில் அம்மா வேலையைக் கவனிக்கப் போயிருக் கிறாள் என்பதைப் புரிந்து கொண்டாள் லாவண்யா.

ஆனால் ஒன்றுமட்டும் அவளுக்குப் புரிய வில்லை. அம்மா ஏன் இப்படி இவ்வளவு உற்சாகத்தில் திளைத்துப் போயிருக்கிறாள்? அன்று சாயுங்காலம் ஆறு மணிக்கு அவள் வீடு திரும்பும்போது கூட அம்மா அதே உற்

சாகத்தில் காணப்பட்டான். விபரீதம் ஏதும் நிகழாமல் இருக்க வேண்டுமே என்றுகூட லாவண்யா பயந்தாள்.

o o o

மொட்டை சொன்னபடி பஸ் ஸ்டாண்டில் லாவண்யாவுக்காகக் காத்திருந்தான். அவன் ஏற்பாடு செய்திருக்கும் வேலையின் விவரங்கள் ஒன்றும் இன்னும் தெரியவில்லை. மொட்டை ஏற்பாடு செய்திருப்பதால், அது ஒரு நல்ல, கண்ணியமான வேலையாகத்தான் இருக்கும்.

பாண்டியன் ஹோட்டலை அடையும்போது, மணி எட்டேகால்.

அவர்கள் இருவரையும் வரவேற்றவருக்கு வயது அறுபது இருக்கும். பருத்திப் பூப் போன்ற தலை. அடர்த்தியான புருவங்கள். தொளதொளவென்ற ஒரு பைஜாமாவில், நீண்ட அங்கியுடன் காட்சியளித்தார்.

''நமஸ்காரம் சார்! இவதான், நான் சொன்னேனே லாவண்யா!...''

''ஓ, வாட் எ ப்யூட்டி! உட்கார் லாவண்யா!''

லாவண்யா உட்கார்ந்தாள். கலையை ரசிக்கும் கண்கள் என்று அவரை எடை போட்டாள்.

''லாவண்யா... என் பேர் சங்கரன். ஷங்கர்னு இங்கிலண்ட் போனதும் மாத்திண்டேன். என் வியாபாரம் எக்ஸ்போர்ட்ஸ்''.

''சந்தோஷம்.''

''முப்பது வருஷமா கண்டது கண்டதையெல்லாம் ஏற்றுமதி செய்து பணத்தைக் கன்னு பின்னுன்னு சம்பாதிச்சாச்சு... கேரளாவிலிருந்து மிளகு, செம்மீன், மெட்ராஸ்லேந்து ப்ளீடிங் மெட்ராஸ், பாம்பேயிலிருந்து பஹனுஸ், யு. பி.யிலிருந்து மாங்கோஸ் இப்படி ஒண்ணு பாக்கியில்லாமே எக்ஸ்போர்ட் பண்ணியாச்சு. இப்ப அலுத்தும் போயிடுத்து.''

''இப்ப ஸார் கொடைக்கானலிலே ஸெட்டில் பண்றார்.''

''பண்றார் என்ன பண்றார், பண்ணியாச்சு. அன்னிக்குச் சொன்னேனே அந்தப் பங்களாவை வாங்கியாச்சு மொட்டே! லட்சத்து முப்பது...''

''அப்படியா?''

''ஆமாம். கேளு, லாவண்யா... என் மனைவி காலமாகி நாலு வருஷமாச்சு. ஒரே பிள்ளை. அவன் ஜெர்மனியிலே, ஜெர்மன் மனைவியோடு சந்தோஷமா இருக்கான். நான் இப்ப கொடைக்கானல்லே நிம்மதியா யிருக்கப் போறேன். ஆனா எதையாவது செய்யணும்னு கை துறுதுறுத்துண்டே இருக்கு...''

''மறுபடியும் எக்ஸ்போர்ட்டா?'' லாவண்யா சிரித்தாள்.

''நோ! அதுக்கு நான் முழுக்குப் போட்டாச்சு. மேல கோபுர வாசல் தெருவிலே ஒரு பெரிய இடம் விலைக்கு வந்தது. இரண்டு மாடிக் கட்டிடம். கீழே பிரும்மாண்டமான ஹால். அதை ஒரு ஷோ ரூமாப் பண்ணப் போறேன்.''

''துணிக் கடையா?''

''நோ... ஆர்ட் சென்டர்... மதுரை மேல கோபுர வாசல் தெரு இருக்கே, அதை யாரானும் 'மிஸ்' பண்ண முடியாது. மேனாட்டு டூரிஸ்டெல்லாம் இந்த வழியாத்தான் போயாகணும். என்னோடு ஆர்ட் கலைக் கூடத்திலே இல்லாதது ஒண்ணும் இருக்காது. வெறும் ஓவியமும் சிற்பமும் மட்டும்தான் இருக்கும்னு நெனைக்காதே. இமாச்சல் பிரதேசத்திலே ஒரு கிராமத்திலே பண்ற பூவேலை கூட இருக்கும். மைசூர் தந்தம், பத்தமடை பாய், அஸ்ஸாம் கூடை, காஷ்மீர் ஆர்ட்ஸ் எல்லாம் இருக்கும்.''

''சந்தோஷம்.''

''இன்னொரு விசேஷம் என்ன தெரியுமா? என்னுடைய கலைக் கூடத்தை உன்னை மாதிரி அழகான பெண்கள் நடத்துவார்கள். விற்பனை வியாபாரம் எதுவும் இருக்காது. ஆனால் அட்மிஷன் சார்ஜ் ஒரு ரூபாய் உண்டு. ஃப்ரீன்னு வைச்சா மதுரை பூரா எக்ஸிபிஷன் பார்க்க வர்ற மாதிரி வரும். ஒரு ரூபாய்னு வைச்சா, உண்மையான அக்கறையும், சிரத்தையும் உள்ளவா மட்டும் வருவா!''

''வியாபாரம் இல்லேன்னு?....''

லாவண்யா விழித்தாள். மொட்டையைப் பார்த்தாள்.

''இனிமேல் சம்பாதிக்கணும்னு எனக்கு ஆசை இல்லே.... இருபது லட்சம் ரூபாயை இதிலே கொட்டியிருக்கேன்.... தினசரி வர்ற அட்மிஷன் சார்ஜ் பணத்திலே சென்டர் ஓடும். உன்னை மாதிரி இன்னும் நான்கு பெண்களை நியமிக்கப் போறேன்.... மாசம் எழுநூறு ரூபாய் சம்பளம். மூன்று மாதங்களுக்கு அப்புறம் உன் வேலை திருப்தியாக இருந்தால் கன்ஃபர்ம் பண்ணுவேன்...''

''திருப்தியா யிருக்கும்!'' என்றான் மொட்டை.

''அதைப் பத்தி நான்தான் தீர்மானிக்கணும்'' என்றவர், ''இன்னும் ஒரு கண்டிஷன்'' என்றார். பிறகு நிதானமாகத் தொடர்ந்தார்.

''நீ கட்டிக்க வேண்டிய புடவை சோளி எல்லாம் நான் வாங்கி வைப்பேன். ஆர்ட் சென்டருக்கு வந்ததும் நீ உடை மாற்றிக் கொள்ள வேண்டும். சாயங்காலம் திரும்பிப் போகும் போது உன் புடவையில் திரும்பலாம்.''

உயர் ரகப் புடவைகளைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்று நிபந்தனை போடும் இந்த அபூர்வ மனிதரைக் கண்டு லாவண்யா ஆச்சரியப்பட்டாள்.

''இது என்ன சார், ஒரு நிபந்தனையா?''

''நிபந்தனை இனிமேத்தான் வர்றது... புடவைகள் காஸ்ட்லி. நீ கவனிக்கப்போற சென்டரிலே லட்சக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள பொருள் இருக்கு. ஆனா உங்க மனசிலே இதைப் பத்தி யெல்லாம் ஒரு பயம் உண்டாக, எப்பவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்ற எண்ணம் நிலைக்க, நீ ஐயாயிரம் ரூபாய் டெபாஸிட் கட்ட வேண்டும். பாங்கிலே கட்டிப் பாஸ் புக்கைக் கொடுத்தாலும் போதும்.''

லாவண்யா திடீரென்று நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

''டெபாஸிட்டா? ஐயாயிரமா?''

அவளுடைய அதிர்ச்சியைக் கண்ட மொட்டை, ''ஓகே சார்... டெபாஸிட் கட்டுவாள்!'' என்றான். (தொடரும்)

# ஹார்லிக்ஸ்




## ஒவ்வொரு நாளும் ஆரோக்கியத்தைப் பாதுகாத்து, எதிர்ப்புச் சக்தியை வளர்க்கும் ஊட்டச் சக்தி.

ஒவ்வொரு நாளும் ஹார்லிக்ஸ் அருந்தினல், அது உங்கள் குடும்பத்தினருக்கு எதிர்ப்புச் சக்தியை வளர்க்கும் ஊட்டச் சக்தியை அளித்து, அவர்களை பூரண ஆரோக்கியத்துடன் விளங்கச் செய்கிறது.

உலகமெங்கிலும் டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது ஹார்லிக்ஸ் ஒன்றுதான். தனிச்சிறப்பு மிக்க ஹார்லிக்ஸ் செய்முறை, ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள சத்துமிக்க, சுத்தமான பொருள்களை கலக்கும்பொழுது, அவற்றிலுள்ள இயற்கையான, நல்ல தன்மைகளை நிறுத்தி, அவற்றை எளிதில் ஜீரணிக்க வகை செய்கிறது. அதனல், மிகுந்த அளவில் ஊட்டச்சக்தியை அளிப்பதும் ஹார்லிக்ஸ் ஒன்றுதான்.

அதனலேயே, சுசித்ரா ஹார்லிக்ஸை தனது குடும்பத்தினரது வாழ்க்கையின் ஒரு அம்சமாக்கி இருக்கிறள்.

சுசித்ராவைப் போன்றே, உங்கள் குடும்பத்தினருக்கும் ஒவ்வொரு நாளும் ஹார்லிக்ஸ் அளித்து, அவர்கள் ஆரோக்கியமாகவும், வலுவுடனும் வளருவதைக் கவனியுங்கள்.

[illegible]



**ஹார்லிக்ஸ்** முழுமையான ஊட்டம்பெற

“அம்மா.” ஓடிக்கொண்டிருந்த தையல் மிஷின் நின்றது.

“யாரது?” — என்று கேட்டுக் கொண்டே வாசலுக்கு விரைந்தாள் ஜெயம். அவள் வீட்டுப் பால்காரன் வேலன்.

“என்ன வேலா?”

“ஒண்ணுமில்லேம்மா... என் மாட்டை அக்கட்டிலே எதிர்த்தாப்பலே இருக்கிற மைதானத்திலே கட்டி வைச்சிருக்கேன். நீள கவுறு வுட்டிருக்கேனுங்க. அம்மா வீட்டிலே இருந்தாக்கலேயே பார்த்துக்கிட்டா போதும்! சந்தைக்குப் போகோணும். பொழுதோட திரும்பிடுவேனுங்க....”

ஒரு நிமிடம் எதிர்த்தாப்பில் இருந்த காலி இடத்தில் கட்டப்பட்ட அந்த மாட்டைப் பார்த்தாள். மூளை அடித்துக் கயிற்றை நீளமாக விட்டு மாட்டைக் கட்டியிருந்தான் வேலன்.

மாடு சுதந்திரமாக மேய்ந்து கொண்டிருந்தது தன் எல்லைக்குள்.

மீண்டும் மிஷின் ஓட ஆரம்பித்தது.

ஜெயத்தின் மிஷின் ஓடினால்தான் அந்த வீட்டில் மனித உயிர்கள் ஓட முடியும். இறந்து போன கணவனை நினைத்து அழக்கூட நேரமில்லை அவளுக்கு.

மகனின் சிரிப்புக்காக மகிழ்வதா? கணவனின் இழப்புக்காக அழுவதா என்று புரியாத நிலை! எப்போதோ அவள் கணவன் அவளுக்குப் பரிசாக வாங்கித் தந்திருந்த தையல் மிஷின்!

வளர வேண்டிய மகனை விட்டுவிட்டு வேலைக்குப் போகவும் முடியவில்லை. கொஞ்சம் வசதியோடு வாழ்ந்த நாட்களில் சேகரித்த பொருட்கள் ஒவ்வொன்றாக விடைபெற்றுக் கொண்டிருந்தன. நகை, நட்டு, பாத்திரம் பண்டம்! பகபதி பெரியவனாகிக் கொண்டிருந்தான்...... அப்பா இல்லாத பையன் என்ற காரணத்தால் அதிக அன்பைக் கொட்டினாள் ஜெயம். தலைவன் இல்லாத வீடு என்ற காரணத்தால் செல்லத்தைக் கொஞ்சம் அதிகமாகவே தந்தாள். என்ன கேட்டாலும் அம்மா தருவாள் என்று பகபதி நினைத்து விட்டான்! மிஞ்சியது....?

கணவனின் நினைவுகள், பொறுப்பில்லாத மகன், பரிசுப் பொருளான தையல் இயந்திரம்! தையல் இயந்திரத்தை விற்றால் சில மாதங்களில் பணம் தீர்ந்து விடலாம்..... ஆனால் அதையே முதலாக்கினால்....?

ஜெயம் தன் வீட்டின் தேவைகளுக்குத் தைத்துக் கொண்டிருந்தவள் அதையே தொழிலாக்கினாள். மெல்ல மெல்ல அவள் தொழில் ‘சூடு’ பிடித்தது. அவள் மீது இரக்கம் கொண்டவர்கள், அவள் துன்பக் கதையைத் தெரிந்தவர்கள் பரிதாபப்பட்டு அவளிடமே தைக்கக் கொடுத்தனர். குறித்த நேரத்தில் துணிகளைத் தைத்துத் தந்தாள், நியாயமான கூலி வாங்கிக் கொண்டாள்! உண்மையாக உழைத்தாள்.

பகபதிக்குத் திமர் என்று செலவு வரும்! அம்மாவிடம் ஐந்து ரூபாய் வேண்டும் என்று கேட்பான். ‘தையல் மிஷின்’ ஓயாமல் சத்தம் போட்டுக் கொண்டே யிருக்கும். அவன் நோட்டு என்றும், புத்தகத்திற்கு என்றும் பணம் கேட்ட போதெல்லாம் கைஓடிய, கால் வலிக்க, தோள் வலிக்க இராப்பகலாகத் தைத்துத் தைத்துப் பணம் சேகரித்தாள் ஜெயம். ஆனால் மகன்..? ..

முன்பு தாயிடம் பணம் கேட்டு வாங்கிக் கொண்டிருந்தவன் இப்போது கொஞ்ச நாட்களாக நேரடியாகவே பணம் எடுக்க ஆரம்பித்து விட்டான்! முகலில் இந்த உண்மை ஊசியாக அவள் உள்ளத்தைக் குத்தியது.

பத்து ரூபாய் கூலி வாங்கி அதைத் தன் ஒரே சொந்தான மர அலமாரியில் வைத்து அதன்மீதே சாவியையும் வைத்திருந்தாள்.

கோவிலுக்குப் போய்விட்டு வந்தபோது ரொம்பவும் பசித்தது. தனக்கு ரொட்டியும், மகனுக்கு ஹோட்டலில் சப்பாத்தியும் வாங்கி வரலாம் என்ற எண்ணத்துடன் அலமாரியைத் திறந்தபோது....??

ஒரே ஐந்து ரூபாய் தானிருந்தது இரண்டு நோட்டு வைத்திருந்தாளே! என்னவாயிற்று? ஒரு வேளை பகபதி....? சீ! ஒரு பைசா வேண்டும் என்றால்கூட என்னிடம் தான் கேட்பான் என் பிள்ளை! எனக்குத் தெரியாமல் :...



‘ஒருவேளை அவசரமாகப் பணம்தேவைப்பட்டிருக்கும். சாவி இங்குதானே இருக்கிறது! அம்மா அலமாரிதானே என்று எடுத்திருக்கலாம்... கேட்டால் தெரியும்.... பகபதி வந்தான் – வெகு நேரம் கழித்து. ஜெயம் வாசல்கதவைத் திறக்கப் போன போது.. சிகரெட் நெடி!

ஏதோ கேட்க வாயெடுத்தவளை அந்த நெடி வாயை அடைத்தது! ஏதோ ஓர் உறுத்தல்! அவள் அதைக் கண்டிக்கவில்லை! கண்டிக்கவில்லை என்பதை விட அவனை எப்படிக் கண்டிப்பது என்கிற பயமும், பாசமும் அவளைப் பற்றி இழுத்தன! கணவனும் போன பிறகு ஒரே ஆதாரம் .. இந்தப் பிள்ளை.... இவனை.... இவனை மெல்ல மெல்லத் திருத்த வேண்டும்! இருபது வருடங்கள் துளிர்த்த பின் இனி வெட்டவும் முடியாது, வேருடன் சாய்க்கவும் முடியாது! அவன் தூங்கிய பிறகு அவன் சட்டைப் பைக்குள் கையை விட்டுப் பார்த்தாள். இரண்டு சினிமா டிக்கெட்!

பணம் திருடிச் சினிமா பார்க்கிறான் அவள் பிள்ளை! அவள் கை ஒடிய உழைத்த பணத்தை ஊதித் தீர்க்கிறான்! அன்று வெகு நேரம் அவள் அழுது கொண்டிருந்தாள்!

மறுநாள் அவனாக வலியச் சொல்வான் என்று நினைத்திருந்தாள். அவன் சொல்லவும் இல்லை, அதைப்பற்றிக் கவலைப்படவும் இல்லை!

இரண்டு மூன்று தடவை 'டெஸ்ட்' செய்து பார்த்தாகி விட்டது — பணம் குறைய ஆரம்பித்தது. பிறகு....?

''பெரிய லக்ஷ ரூபாய். .. இரும்புப் பெட்டியிலே வைச்சுப் பூட்டு! அலமாரிச் சாவி எங்கே?''

''ஏன்? எங்கிட்டே இருக்கு....''

''எதுக்கு இந்தப் புதுப் பழக்கம்?''

''எல்லாமே.... புதுசு புதுசா பழக்கம் உங்கிட்டே தானே கிளம்பியிருக்கு!''

''கையேந்தி நிக்கணும்னு சொல்றியா?''

''இல்லியே! புருஷனை இழந்து ஒரு பொம்பளை ஒட்டி தனியா தன்மானத்தோட வாழ்ந்திட்டிருக்கேன்...நான் யார்கிட்டேயும் கையேந்தவில்லே.... நீ பெரியவனாக வளர்ந்துட்டே! பெருமையா வளருவேன்னு நினைச்சேன்? பரவாயில்லே. நீ இனிமேல் கையேந்தாமல் வாழமுடியும். பழகிக்கோ...''




''பெரிய கலெக்டர் உத்தியோகம் பண்ணி வைச்சுட்டே. நான் வாழறதுக்கு!''

''கலெக்டர் வேலே வேண்டாம்டா. கண்ணியமா வேலே செய்யணும்! பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினேன். பெரிசா படிக்கப் போறேன்னு! கோலி விளையாடிட்டு வீடு திரும்பி இருக்கேன்னு ரொம்ப நாளைக்கு அப்புறம் தெரிந்தது. நான் தந்த பணத்துக்குப் பாடப் புத்தகம் வாங்கறேன்னு நினைச்சேன். சினிமா டிக்கெட் வாங்கிச் சீரழிஞ்ச கதை அப்புறமாத்தான் தெரிஞ்சது! பணத்துக்காவது பாதுகாப்பாக இருப்பேன்னு நினைச்சேன்! திருடன்னு இப்போதான் புரியறது!''

அவன் கோபமா வெளியேறினான்.

ஒருவேளை ரோஷம் தாங்காமல் தற்கொலை கொலை செய்து கொண்டு விடுவானோ! கடவுளே! அவள் உள்ளூறப் பதறிப் போய் விட்டாள்.

மாடு....? — நீளக் கயிற்றில் கட்டப்பட்ட மாடு சுற்றிச் சுற்றி மேய்ந்து கடைசியில் அதன் நீளக் கயிறு முழுதும் அந்த முளைக்கட்டைச் சுற்றிச் சுற்றி வடம் போட்ட மாதிரி நிறைந்து இப்போது கயிறு நீளம் குறைந்து நகரவே இடமில்லாத நிலையில் முளை அடித்த இடத்தின் அருகிலேயே படுத்து விட்டது!

இப்படித்தான் அவனும்! மகனுக்குத் தந்த அதிகப்படியான அன்பெனும் நீளக் கயிற்றினால் அவளே முளையடிக்கப்பட்டுத் தானும்



பார்க்கில் சிரித்துக் கொண்டிருந்தனர் இருவர்
- அவர்கள் காதலர்கள்.

வீட்டில் சிரித்துக் கொண்டிருந்தனர் இருவர்
- புது மணத் தம்பதிகள்.

ரோட்டில் நாலு பேர் இருவரையும் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தனர்.
- அவர்கள் பழைய குடும்பஸ்தர்கள்.

- லலிதா செல்லப்பா

---

கட்டுண்டு. அவனையும் விட முடியாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறான்!

யோசித்துக் கொண்டிருந்த போது....

'சரக்'கென்று ஊசி — வலது ஆள்காட்டி விரலின் நுனியில் பாய்ந்து விட்டது — கண்ணில் தண்ணீர் வந்து விட்டது... சிவப்பு பவழமாக ரத்தம் வட்டமாக விரல் நுனியில் மோதிரம் போட்டாற் போல் நின்றது.

தைக்கும் துணி கெட்டுவிடப் போகிறதே என்ற பயத்தில் மெல்லக் கையை எடுத்தாள். ஓர் சரத் துணியால் கையிலே ஒரு கட்டைப் போட்டுக் கொண்டாள்... ஆயிற்று தைத்தாகி விட்டது! தைத்த துணிகளை எடுத்துக் கொண்டு அந்த அம்மாவின் வீட்டைத் தேடிப் போனாள். இந்த மாதம் அவர்கள் எக்கச்சக்கமாகத் துணி 'ஆர்டர்' தந்திருக்கிறார்கள் தைக்க. அந்த அம்மாள் மகளுக்கு நடன உடை தைக்க வேண்டுமாம்! 'டிஷ்யூ' புடவையைக் கிழித்துத் தைக்க வேண்டும் என்று தந்திருக்கிறார்கள்! கிட்டத்தட்ட கூலியே நூறு ரூபாய் வரும். அவர்களிடம் 'அட்வான்ஸ்' நூறு ரூபாய் வாங்கலாம். பகபதி கேட்டது போல் அவனுக்கு ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் அல்லவா? ஜெயம் வீடு திரும்பிக் கொண்டிருந்தாள்.

கையில் நூறு ரூபாய் நோட்டு இருந்தது. என்ன இருந்தாலும் அந்த அம்மாள் நல்லவள். ஜெயத்தின் குடும்ப நிலையையும், உதவாக்கரைப் பையனையும் பற்றித் தெரிந்து கொண்டவள்! "உன்னிடம் பணம் இருந்தால் அடித்துக் கொண்டு போகும் உன் பையனைப் பற்றித்தான் எனக்குத் தெரியும்... இனியாவது உன்னிடம் பணம் கொண்டு வந்து கொடுக்கும் உன் மகனைப் பற்றி என்னிடம் சொல்லுவாய் என்று எதிர்பார்க்கிறேன்" என்றாள்.

வீட்டை அடைந்தபோது வாசற்கதவு திறந்து இருந்தது! ஆயிரக்கணக்கான மதிப்புள்ள புதுத் துணிகள் இருக்கின்றனவே!

ஜெயம் ஓசைப்படாமல் உள்ளே நுழையும் போது...! பகபதி அந்த அலமாரியிலிருந்த அத்தனை புத்தம் புதுத் துணிகளையும் மூட்டை கட்டிக் கொண்டிருந்தான்! அடப்பாவி! ஜெயத்தின் இடுப்பில் வீட்டுச் சாவியும், வாசலில் கதவின் சாவியும் இருக்கும்போது எப்படித் திறந்தான்....?

இருட்டில் ஜெயத்தின் கால்களை ஏதோ குத்தியது! பெரிய இரும்புக் கம்பி!

'ஜெயம்', இனி நீ நம்பிக்கை வைப்பதில் அர்த்தமில்லை. உன்னைக் கொள்ளையடித்தான்! பாசம் என்ற பெயரில் பொறுத்துக்கொண்டாய்! ஊரைக் கொள்ளையடித்தால் 'சமூகத் துரோகம்!' பாசத்துக்கு மன தண்டனைதான்! இரண்டாவதுக்கு ஊரார் தரும் தண்டனை! இவனையா நம்பி வேலையில் அமர்த்தப் போகிறாய்? போகிற இடத்தில் இதே கைவரிசையைக் காட்டினால் ஊரார் சும்மா இருப்பார்களா?'

ஜெயம் விளக்கைப் போட்டாள்!

"அம்மா!"

பகபதி அசந்து விட்டான்! அம்மாவை அந்த நேரம் அவன் எதிர்பார்க்கவேயில்லை.

கொஞ்சம் தடுமாறியவன் பேசாமல் அந்த மூட்டையை அலமாரியில் வைத்தான். ஜெயம் ஒரு பெருமூச்சு விட்டாள்! ஒரு நிமிடம் தாமதமாக வந்திருந்தாலும்....? எவ்வளவு பெரிய ஆபத்து! வெளியே போகக் கிளம்பியவனை — "உனக்கு ஒரு நல்ல வேலை தேடத்தான் வீட்டை விட்டுப் போனேன். இதோ பார்த்தியா நூறு ரூபாய் உன் வேலைக்கு 'அட்வான்ஸு'க்கு'. என் உழைப் போட 'அட்வான்ஸை' வாங்கிட்டு வந்தேன். ஆனால், உனக்கு வேலை தேவையில்லைன்னு நினைக்கிறேன்...." என்று கூறி நிறுத்தினாள்.

ஒரு நிமிடம் 'சட்'டென-நிமிர்ந்து பார்த்த பகபதி மறுபடியும் தலையைக் குனிந்து கொண்டான்!

"இனிமேல் நீ இந்த வீட்டுக்குள்ளே நுழையாதே! இருடனாக மட்டும் இல்லே! மகன்கிற உரிமையோட கூட நுழையாதே!"

"அம்மா....நான்...."

"ஆமாம். உன்னை எப்படி இழக்கிறதுங்கற பயத்திலேயே உன் இழுப்புக்கெல்லாம் நான் வந்தேன்.... ஆனால் ரொம்ப நாளா நான் கட்டிக் காப்பாத்தின 'நல்லவள்'ங்கிற-பெயரை இழக்க விரும்பவில்லை! எனக்கேத்த நல்ல மகனா என்னிக்கு நீ வரயோ அன்னிக்கு வா! இல்லேன்னு வரவே வேண்டாம் "

பகபதி தயங்கினான்....

"அம்மா! அம்மா!"

வாசலில் ஓலமிடுவது? வேலனா?

"என்னம்மா மாடு கட்டை அவிழ்த்துக் கிட்டுப் போயிடுச்சு? அது ஒரு திருட்டு மாடும்மா. சும்மா இருக்காது. எவன் காட்டிலேயாவது மேய்ஞ்சு. அவன் அதைப் புடிச்சு 'பவுண்டுலே' அடைச்சு வைப்பான்! நான் அபராதம் கட்டிட்டுக் கூட்டியாரணும். இதுக்குதாம்மா நான் உன்கிட்டேயே சொல் விட்டுப் போனேன்...." என்று கத்தியபடி வேலன் பரபரப்புடன் மாட்டைத் தேடி ஓடினான்!

'வேலா! உன் மாடு கட்டை அறுத்து விட்டது! இங்கு நான் கட்டுக்களை அறுத்து விட்டேன்! நாளைக்கு அந்த நூறு ரூபாயைப் பத்திரமாகத் திருப்பித் தர வேண்டும்!' — தனக்குள் பேசியபடி காலையில் தான் போட்டுக் கொண்ட தன் கையின் கட்டை மெல்ல அவிழ்த்தாள் ஜெயம்!

# சாட்சி நம்பர் 3

விமல் மித்ர

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்.

## 14. சாட்சியும் சம்மனும்

குரலைக் கொண்டு கூப்பிட்டது சரயுதான் என்று புரிந்து கொண்டேன்.

நான் நாற்புறமும் பார்வையை ஓட்டினேன். ஆனால் யாரும் கண்களில் புலப்படவில்லை. சரயு தனிமையில் என்னிடம் ஏதோ சொல்ல விரும்பினாள் போலும்! சந்தர்ப்பத்தை எதிர்நோக்கித்தான் அங்கே நின்று கொண்டிருந்திருக்கிறாள். பிறகு தானே என் அருகில் வந்து, 'இதென்ன நீங்கள் இப்படிச் செய்து விட்டீர்கள்?'' என்று கேட்டாள்.

இவள் என்ன கேட்கிறாள்? சரயுவின் கேள்வியின் பொருள் புரியாமல் விழித்தேன். பிறகு, ''நான் உனக்கு என்ன தீமை செய்தேன்?'' என்று கேட்டேன்.

''இன்னும் என்ன செய்ய வேண்டும்? உங்கள் நாவலைப் படமாக்க இருக்கிறார்களே, அதை நான் படித்தேன். அதன் கதாநாயகியைக் கடைசியில் வேசித் தொழில் புரிய விட்டிருக்கிறீர்களே, இது நியாயமா? உண்மையில் நான் அப்படியா இருக்கிறேன்?'' என்று கேட்டாள் சரயு.

அதற்குச் சரியான பதில் என்னிடம் இருந்தது. ஆனால் அதைச் சொல்லத்தான் எனக்கு வாய் வரவில்லை.

கேட்ட கேள்விக்கு நான் ஏதாவது பதில் சொல்ல வேண்டாமா? நான் வாய் எடுப்பதற்குள் சரயுவே தொடர்ந்தாள்: ''நீங்கள் என்னை வைத்துக் கொண்டுதான் அந்தக் கதையே எழுதியிருக்கிறீர்கள் என்பது இவர்களுக்குத் தெரியாது. யாருக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் எனக்குத் தெரியாமல் போய் விடுமா? ஆனால் ஒன்று. உங்களைக் காட்டிலும் நான் என்னை நன்றாக அறிவேன். உங்கள் கதையில் வரும் கதாநாயகியைப் போல் நான் ஒன்றும் அவ்வளவு முட்டாள் இல்லை. நல்லது—கெட்டது எனக்கும் தெரியும். என்னைப் பற்றி உங்களுக்கு யார் இந்தக் கதையெல்லாம் சொன்னார்கள்? யார் சொன்னால் என்ன? சொன்னவர்கள் உங்களிடம் உண்மையைச் சொல்லவில்லை. இது உறுதி!''

''கதை கதைதானே? அதற்காக நீ ஏன் இத்தனை விசனப்படுகிறாய்?'' என்று கேட்டேன் நான்.

''நீங்கள் என் பேரில் பொய்யாக மாசுகளைக் கற்பிப்பது, நான் விசனப்படாமல் இருப்பதா? அது எப்படி முடியும்?'' என்று கேட்டாள் சரயு.

''ஆனால் சரயு, என் கதையிலே நான் எங்கேயும் மறந்து போய்க்கூட உன் பெயரைக் கொடுக்கவில்லையே!''

''நீங்கள் என் பெயரைக் கொடுத்திருந்தாலும் நான் உங்களை என்ன செய்திருக்க முடியும்? உங்கள் மீது மான நஷ்ட வழக்குத்தான் தொடுக்க முடியுமா? நீங்கள் என்னைப் பற்றி இத்தனை எழுதியிருக்கும் பொழுது, என் பெயரைக் கொடுக்க வேண்டாம் என்று யார் உங்கள் கையைப் பிடித்துத் தடுத்தார்கள்?'' என்று கேட்டாள் சரயு.

''இதைச் சொல்வதற்காகத்தான் நீ இத்தனை நேரமும் இங்கே ஒளிந்து எனக்காகக் காத்திருந்தாயா? இப்பொழுது யாராவது இங்கே உன்னைப் பார்த்து விட்டால்....?'' என்றேன் நான்.

''இப்பொழுது யார் என்னை இங்கே பார்க்கப் போகிறார்கள்? யாருக்கு அத்தனை பொழுது இருக்கிறது? இப்பொழுது எல்லோரும் விஸ்கியில் குளித்துக் கொண்டிருப்பார்கள்; போதையுமே தலைக்கு ஏறியிருக்கலாம்!'' என்றாள் சரயு.

''நிசிகாந்தன் சாராயம் குடித்தான் என்பதனால்தானே நீ அவனைத் துறந்தாய்? ஆனால் விதியின் வேடிக்கையைப் பார்! அவனைக் காட்டிலும் மடாக் குடியர்களிடம் உன்னைக் கொண்டு வந்து தள்ளிவிட்டது. உலைநீருக்குப் பயந்து உலையிலேயே விழுந்த கதையாகி விட்டதில்லையா உன் நிலை!'' என்றேன்.

''நிசிகாந்தன் சாராயம் குடித்தார் என்பதற்காக நான் அவரைத் துறந்து வந்தேன் என்று உங்களிடம் யார் கதை கட்டி விட்டார்கள்? பாருங்கள், நீங்கள் உங்களைப் பெரிய கதாசிரியராக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் உண்மையில் உங்களால் மனித மனத்தையோ வாழ்வையோ சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. என்னைக் கேட்டால் நீங்கள் நிசிகாந்தனையும் புரிந்து கொள்ளவில்லை. என்னையும் புரிந்து கொள்ளவில்லை. என்றாலும் எங்கள் இருவரையும் வைத்துக் கொண்டு கதை எழுதி விட்டீர்கள். அந்தக் கதை இப்பொழுது படமாகவும் வரப் போகி

றது. உங்களை ஒன்று கேட்கலாமா? நீங்கள் இந்தக் கதையை ஏன் எழுதினீர்கள்? நிசிகாந்தனை ஏன் இப்படி அவமானப் படுத்தினீர்கள்?'' என்று சிறுத தோஷமாகக் கேட்டாள் சரயு.

''நிசிகாந்தன் எப்படி இருக்கிறானோ, அப்படியே அவனை மதிப்பிட்டுக் கதையாக வடித்திருக்கிறேன்!'' என்றேன் நான்.

''இல்லை. நிசிகாந்தன் நீங்கள் நினைப்பது போல் தீய ஒழுக்கம் கொண்டவரும் அல்ல, கயமைக் குணம் படைத்தவரும் இல்லை. மனிதனின் வெளி உருவத்தை மட்டும் பார்த்து அவன் நடத்தையைப் பற்றி முடிவு கட்டுவது சிறிதும் நியாயம் இல்லை'' என்றாள் சரயு.

''உனக்கு மல்லிக் சாஹப்பைத் தெரியுமா? மணிக் தலாவில் நீ குடியிருந்த வீட்டுக்குச் சொந்தக்காரரைத்தான் கேட்கிறேன்!'' என்றேன்.

''அந்தக் கயவனையா?''

''அவரையா கயவன் என்கிறாய்! அவரை நீ அடிக்கடி சந்திக்கிறதுண்டாமே! அவர் கையில்தான் நீ நிசிகாந்தனின் குடியிருப்புக்குரிய வாடகை, தேநீர்க் கடைக்குள்ள பாக்கி, சாப்பாட்டுக்கு ஆகும் செலவு எல்லாமே கொடுத்து அனுப்பி யிருக்கிறாயாமே!'' என்று கேட்டேன்.

''அவ்வளவும் பொய்!''

''என்ன சொல்லுகிறாய் நீ? அப்படியானால் மல்லிக் சாஹப் என்னிடம்சொன்னதெல்லாம் பொய்யா? நிசிகாந்தனுக்கு நான் இருநூறு ரூபாய் தருவதாகக் கூறி வீட்டுக்கு வரச் சொல்லியிருந்தேன். ஆனால் என்னடாவென்றால் நீ மல்லிக்சாஹப்பின் மூலம் அவனுக்குப் பணம் கொடுக்கக் கூடாது என்று சொல்லியனுப்பியிருந்தாய். அதோடு நிசிகாந்தனே என்னிடம் நீ ரொம்பக் கெட்டு விட்டதாக வேறு சொன்னானே!'' என்றேன்.

''நான்தான் எப்பொழுதோ கெட்டுப் போய்விட்டேனே! இது அவர் சொல்லியா உங்களுக்குத் தெரிய வேண்டும்? மோகாமா காட் ஸ்டேஷனில் கஞ்சா நிறைந்த சூட்கேஸை உங்கள் கையிலே கொடுத்துவிட்டு நான் ஓடி மறைந்தேனே; அன்றே உங்களுக்கு இது தெரிந்திருக்க வேண்டுமே! அதற்குப் பின் போலீசுக்குப் பயந்து உங்கள் வீட்டில் அடைக்கலம் புகுந்ததும், புழக்கடை வழியாக ஓடியதும் உங்களுக்குத் தெரியும். முதலில் தெரியாவிட்டாலும் நான் எப்படிக் கெட்டுப் போய்விட்டேன் என்பதை அன்றைக்காவது நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள். தெரிந்து கொள்ளவில்லை யென்றால், நீங்கள் இதையெல்லாம் எப்படி உங்கள் கதையில் எழுதியிருப்பீர்கள்? நிசிகாந்தன் உங்களிடம் சொன்னதில் ஒரு பிழையும் இல்லை!'' என்றாள் சரயு.

''அப்படியே, சிறிதும் பிசகாமல்தானே உன் கதையை நான் எழுதியிருக்கிறேன்? நடந்ததை நடந்தபடி சொன்னதில் நான் செய்த பிழை என்ன? நான் பொய்யாக இட்டுக்கட்டி ஏதாவது எழுதியிருக்கிறேனா, அதற்கு?'' என்று கேட்டேன்.

''என் கதையை விடுங்கள் சார்! நிசிகாந்தன் விஷயத்தில் நீங்கள் செய்தது அநியாயம்; அக்கிரமம்! அவரை நீங்கள் ஓர் ஒழுக்கம் கெட்ட கயவனாகச் சித்திரித்திருக்கிறீர்கள். அவரை நீங்கள் உங்கள் கதையில் வில்லனாக—தீயவராகக் காட்டியே யிருக்கக் கூடாது!'' என்ற சரயு சிறிது நிறுத்தி, ''நீங்கள் ஒரு பெரிய கதாசிரியர். உங்களைக் கேட்கிறேன். இல்லாமையிலோ, ஏழைமையிலோ, மீளாத் துயரிலோ, மாளாத் துன்பத்திலோ மனிதன் செய்யும் காரியங்களைக் கொண்டு அவனை எடை போடலாமா? இது அவனுக்கு என்ன, மனித குலத்துக்கே இழைக்கும் பெரும் தீங்கு ஆகாதா? உங்களுக்கே தெரியும். நிசிகாந்தன் எவ்வளவு உயர்ந்த, தன்னலம் சிறிதும் பேணாத உண்மையான மனிதர் என்பது! அவர் காரெக்டரை நீங்கள் எப்படிக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி யிருக்கிறீர்கள், தெரியுமா?'' என்று கேட்டாள்.

''என்ன உளறுகிறாய்? ஒரு குடிகாரனை நல்லவன் என்று கூற உனக்கு நெஞ்சு உறுத்த வில்லை?'' என்று கடுமையாகவே கேட்டேன்.

''நெஞ்சும் உறுத்தவில்லை; நாக்கும் நெருடவில்லை. இன்று நான் எவ்வளவு தாழ்ந்து பாழ்பட்டுப் போயிருந்தால் என்ன? நல்லவரை நல்லவர் என்று கூறும் துணிவு எனக்கு இன்றும் இருக்கிறது; என்றும் இருக்கும். அப்படி ஒரு சந்தர்ப்பம் வந்து தேவைப்பட்டால், நான் உலகத்துக்கெதிரே உரத்த குரல் எடுத்து இதைப் பறைசாற்றவும் சித்தமாயிருக்கிறேன்!'' சரயுவின் நெஞ்சுரம் குரலிலும் ஒலித்தது.

''இன்று பெரிதாக என்னவெல்லாமோ வாய் கிழியப் பேசுகிறாயே! அன்று டாலிகஞ்சிலே, நீ குடியிருந்த வீட்டிலே நடந்தது மறந்து போய்விடுகிற அளவுக்குப் பழசாகிப் போய்விடவில்லை. என்னை எதிரே வைத்துக் கொண்டு நிசிகாந்தனை எப்படித் திட்டித் தீர்த்து வெளியே அனுப்பினாய்? உனக்கு மறந்தாலும் எனக்கு மறக்காது!'' என்றேன்.

''ஐயோடா! அந்த நிகழ்ச்சியைக் கண்ணாலே கண்டுவிட்ட வலுவிலேதான் நீங்கள்



உங்களைப் பெரிய எழுத்தாளர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அப்படியே யதார்த்தமாக—தத்ரூபமாக எழுதிவிட்டதாக நினைப்பு; பூரிப்பு! இல்லையா? நீங்கள் மனித மனத்தையும் வாழ்க்கையையும் புரிந்து கொண்டிருக்கும் லட்சணத்தை நான் என்னவென்று சொல்லுவேன்? உங்களுடைய இந்த அறிவாற்றலை நம்பிப் புத்தகம் எழுதி மக்களிடம் பெரிய பாராட்டும் பெறுகிறீர்கள்! வாய் வார்த்தைகளெல்லாம் உண்மை என்று ஆகிவிட்டால், ஆண்டவன் மக்கள் வாயில் புகுந்து புறப்படுகிறானே, அதையும் உங்கள் கணக்கில்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். ஆண்டவனைப் பற்றி மக்களின் மனத்தில் எழும் விஷயங்கள் எல்லாம் எங்கேயாவது வசவு, திட்டு ஆகுமா?''

சரயுவின் கேள்வியால் திக்கித் திணறிப் போனேன். என்னை இந்த இக்கட்டிலிருந்து தப்புவிக்க, ஆண்டவனே கைகொடுத்து உதவ வந்தாற்போலத் திடுமென்று பேச்சரவம் கேட்டது. தயாரிப்பாளரும் இயக்குநரும் இரண்டொருவர் புடைசூழ வாசற்புறம் வந்து கொண்டிருந்தார்கள். சரயு அவர்களைக் கண்டதும் இருளில் மரத்துக்குப் பின்னால் மறைந்து கொண்டாள்.

தயாரிப்பாளர் என்னைப் பார்த்ததும், வியந்து போய், ''நீங்கள் இன்னும் இங்கே தான் இருக்கிறீர்களா? உங்களுக்கு நான் வண்டிக்கு ஏற்பாடு செய்திருந்தேனே!'' என்று கேட்டார்.

''வண்டி எங்கே இருக்கிறது என்றுதான் தேடிக் கொண்டிருக்கிறேன்!'' என்றேன் நான்.

''இன்னும் உங்களுக்கு வ்ண்டி கிடைக்கவில்லையா? ஆச்சரியமாயிருக்கிறதே! இதோ நான் பார்க்கிறேன்!'' என்று முன்னே போனார். கேட்டுக்கு அருகிலேயே சிறிது தொலைவில் வண்டி நின்று கொண்டிருந்தது. டிரைவர் உட்கார்ந்தபடியே தூங்கி வழிந்து கொண்டிருந்தான்.

''இதுதான் உங்கள் வண்டி!'' என்ற தயாரிப்பாளர், டிரைவரை உறக்கத்திலிருந்து எழுப்பி நல்ல திட்டாக நாலு திட்டும் திட்டினார். பாவம், நிரபராதியான டிரைவர் என்பொருட்டுத் திட்டு வாங்கிக் கட்டிக் கொண்டான். அதற்குப் பின், எனக்கு ஏற்



## இப்படியும் நடந்தது!



கார்வாரில் நடைபெறவிருந்த அந்தக் கல்யாணத்துக்கு ஓர் ஏழைப் பெண் வந்திருந்தாள். மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டை அடைந்த போது 'மணப் பெண் காணவில்லை' என்ற செய்தி அவர்களை எட்டியது. பெண்ணைப் பெற்றவர்கள் மணப் பெண்ணின் தங்கையை அந்த மண மகனுக்குக் கட்டிவைக்க முயன்றார்கள்! ஆனால் அந்தப் புதிய மாப் பிள்ளையோ திருமணத்துக்கு வந்திருந்த அந்த ஏழைப் பெண்ணையே மணமகளாக ஏற்றுக் கொள்ளச் சம்மதித்தான். கடைசியில் பெண்ணைப் பெற்றவர்கள் தாராள மனத்துடன் தங்கள் மகளுக்காகச் செய்து வைத்திருந்த நகைநட்டுகளை அந்த ஏழைப் பெண்ணுக்கு அணிவித்துத் திருமணத்தை முடித்து வைத்தனர்!

— டெக்கான் ஹெரால்ட் - பி.எஸ்.எம்.

---

பட்ட சிரமத்துக்காக அவர் என்னிடம் மன்னிப்புக் கோரினார். அவர் வாயிலிருந்து தழுதழுத்துத் தடுமாறி வந்த சொற்களிலிருந்து அளவுக்கு அதிகமாகவே மதுசாரம் அவர் வயிற்றுக்குள் போயிருக்க வேண்டும் என்பது எனக்கு உறுதியாயிற்று. நானும் அதிகம் பேச்சுக் கொடுக்காமல் வண்டியில் ஏறி நேரே வீட்டுக்கு வந்து விட்டேன்.

அப்புறம்?

அந்தப் படம் கடைசிவரை எடுக்கப்படவே இல்லை. பொதுவாக மற்றப் படங்களுக்கு ஏற்படும் கதியேதான் இதற்கும் ஏற்பட்டது. ஏராளமான ரூபாய் பானத்திலும் பெண்ணிலுமே செலவழிந்து விட்டது. ஆனால் எனக்கு இதனால் ஏற்பட்ட அனுபவம் இருக்கிறதே, அதுதான் பெரியதொரு விந்தை மிகு நிகழ்ச்சி! அதைத்தான் இப்போது கூறப் போகிறேன்.

பிலிம் என்கிற விஷயத்தையே நான் அடியோடு மறந்து விட்டேன். வாழ்க்கை எப்பொழுதும் போல ஓடிக் கொண்டிருந்தது. திடீரென்று ஒரு நாள் செய்தித் தாளில் ஒரு செய்தி வெளியாகியது. அதைப் படித்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது!

அந்தச் செய்தி வருமாறு:

''பிரபுதயாள் சிங் என்ற வியாபாரி அவருடைய பானிஹாடி தோட்டத்தில் உள்ள மாளிகையில் கொலை செய்யப்பட்டார். கொலையைச் செய்தவன் நிசிகாந்த ஹால்தார் என்பவன் என்று கூறப்படுகிறது. குற்றவாளி சிறைப்படுத்தப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டிருக்கிறான். கொலைக்கான காரணம் தெரியவில்லை. புலன் விசாரணை நடை பெற்றுக் கொண்டிருக்கிறது!''

பிரபுதயாள் சிங் எனது அந்தக் கதையைப் படமாக்க விரும்பிய தயாரிப்பாளர் என்பது எனக்கு நினைவு வந்தது. நிசிகாந்தன் அவரைக் கொலை செய்திருக்கிறான் என்றால் கொலைக்கு மூலகாரணம் சரயுவாக இருக்க வேண்டும் என்று நான் முடிவு கட்டினேன். 'பிரபுதயாள் சிங் மீது நிசிகாந்தனுக்குக் கோபம் வரவேண்டும் என்றால், அதற்குச் சரயுவே காரணமாக இருக்க வேண்டும்' என்ற முடிவுக்கு வர மூளையைப் போட்டு உடைத்துக் கொள்ள வேண்டுமா, என்ன? பிரபுதயாளைக் கொலை செய்து நிசிகாந்தன் பழி தீர்த்துக் கொண்டிருக்கிறான். வேறு எவருக்குப் புரிந்தாலும் புரியா விட்டாலும் எனக்குத் தெற்றென விளங்கியது.

ஆனால் என்னைச் சாட்சியாக்கியது யார்? என் பெயரைக் கொடுத்தது யார்?

எனக்குச் சாட்சி சம்மன் வரவே, நான் போலீசாரைக் கேட்டேன்.

''குற்றவாளியின் வக்கீல்!'' என்றனர் போலீசார்.

நான் யோசனையில் ஆழ்ந்தேன். அப்புறம் எப்படியோ தேடிப் பிடித்து அந்த வக்கீலின் வீட்டை அடைந்தேன். ''என்னை இந்த வழக்கில் ஏன் இழுக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''நான் உங்களை எதற்கு இழுக்கப் போகிறேன்? ஸ்ரீமதி சரயு ஹால்தார்தான் உங்களை இந்த வழக்கில் மாட்டி வைத்திருக்கிறார்கள். நீங்கள் இந்த வழக்குக்கு மூன்றாவது சாட்சி!'' என்றார் வக்கீல்.

''எனக்கு இந்த வழக்கைப் பற்றி எதுவுமே தெரியாதே!'' என்றேன் நான்.

''உங்களுக்குத் தெரியுமா தெரியாதா என்கிறது எனக்குத் தெரியாது. ஆனால் உங்களுக்கு நிசிகாந்தனைத் தெரியும். சரயுவையும் தெரியும். அவர்களைப் பற்றிச் சொல்லுங்களேன்.''

''ஆமாம், ஸ்ரீமதி சரயு தேவி எந்தக் கட்சிக்குச் சாட்சி?''

''வழக்குத் தொடுத்தவர்கள் கட்சிக்கு! அவளுக்கு எதிர்த்தாற்போலத்தானே பிரபு தயாள் சிங் கொலை செய்யப்பட்டது!''

பிரபு தயாள் சிங் யார் என்று எனக்குத் தெரிந்திருந்தாலும், என் சந்தேகத்தைப் போக்கிக் கொள்ளுவதற்காக, ''பிளைவுட் தொழிற்சாலை நடத்தி வந்தாரே, அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களுக்குக்கூடப் பிளைவுட் பெட்டிகள் தயாரித்து அனுப்பி ஏராளமாகப் பணம் பண்ணினாரே, அந்தப் பிரபு தயாள் சிங்தானே?'' என்று கேட்டேன்.

அவரேதான் என்று தெரிய வரவே என் சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்து போயின. முழு நிகழ்ச்சிகளையும் அடியோடு முடி மனத்துக்குள் முடி போட்டு நான் வந்த முடிவு உண்மையாயிற்று.

நிசிகாந்தனை நினைத்தாலே எனக்கு வருத்தமாகத்தான் இருந்தது; ஏன், சரயுவை நினைத்தாலும்கூடத்தான். வறுமை என்பது ஒரு சாபக்கேடு. பணம் இல்லாக் கொடுமை காரணமாகத்தான் உலகத்திலும் சமூகத்திலும் குற்றங்கள் மலிகின்றன. நிசிகாந்தனுக்கு எந்தக் குறையும் இல்லாமல் இருந்தால், அவன் பாகிஸ்தானத்திலிருந்து ஓடி வரவேண்டி யிராது. மனைவியோடு இடத்துக்கு இடம் குட்டி போட்ட பூனையெனக் குடிபெயர வேண்டிய நிலைமையும் ஏற்பட்

‘உறிஞ்சிக்கோ ருசி
பரிஞ்சிக்கோ!’







குதூகல நகை கொஞ்சும் சுவை: கோல்ட் ஸ்பாட்

Creative Unit-A 2785

# கேர்ஃப்ரீ* பாதுகாப்பு



## அதாவது இது முழுமையான பாதுகாப்பு அளிக்கிறது. இதற்காக நீங்கள் கொடுக்கும் பணத்தைவிட மிக அதிக மதிப்பு வாய்ந்தது.

மாதத்தில் அந்த ஐந்து நாட்கள், பெண்களின் உடலுக்கு முழுவதும் நம்பகமான, தனிப்பட்ட பாதுகாப்பு தேவைப்படுகிறது: அதாவது கேர்ஃப்ரீ பாதுகாப்பு. சானிடரி பாதுகாப்பு சாதனங்களை உருவாக்கும் உலகின் நம்பகமான நிறுவனமான ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் இதைத் தயாரிக்கிறார்கள். ஒரு பெண்மணி பாதுகாப்பையும் காப்புறுதியையும் உணருவதற்குத் தேவையான சிறந்த அம்சங்களைக் கொண்டுள்ளது கேர்ஃப்ரீ.

**விசேஷ ஓண்டர்ராப் மேலுறை**
கேர்ஃப்ரீ தன் வடிவத்தை சீராகவைக்க உதவுகிறது...சாதாரண நேப்கின்களைப் போல இது வளையவோ, நீளவோ செய்யாது. இது உட்புற அடுக்குகளில் ஈரத்தை உறிஞ்சிக் கொள்கிறது. எனவே உங்கள் சருமம் உலர்ந்து இருக்கும், உங்களுக்கு சௌகரியமாக இருக்கும்.

**நீலநிற பிளாஸ்டி-ஷீல்ட் தடுப்பு**
கேர்ஃப்ரீயின் அடிப்பாகம் மற்றும் பக்கங்களைப் பராமரிக்கிறது பாதுகாப்பான பாலித்தீன். ஆகையால், அது இடம் விட்டு நகரும் வாய்ப்பில்லை; கறை படியும் பயம் இல்லை.

**அதிக உறிஞ்சும் தன்மையுள்ள விசேஷ பொருள்**
மிக நன்கு உறிஞ்சுகிறது: உறுதியுடன் பாதுகாப்பளிக்கிறது.

**கச்சிதமாகப் பொருந்த முனைப்பாகம்**
கேர்ஃப்ரீ மட்டுமே விரும்பியபடி சரிசெய்து கொள்ளும் நீளத்தில் வருவதால், அது உங்களுடைய உடலின் கச்சிதமாகப் பொருந்துகிறது. ஒவ்வொரு பேக்கிலும், இலவச கேர்ஃப்ரீ பெல்ட் ஒன்று வைக்கப்பட்டுள்ளது.

**எளிதில் ஒதுக்கிவிடலாம்**
கேர்ஃப்ரீ ஒரு ஆபத்தற்ற, எளிதில் ஒதுக்கித் தள்ளக்கூடிய நேப்கின்; இந்த நீரில் தள்ளிவிடலாம்... வெளியில் செல்லும் போதோ, பயணத்தின்போதோ இது ஒரு வரப்பிரசாதம்—
கேர்ஃப்ரீ பாதுகாப்பு:முழுமையான பாதுகாப்பினை விரும்பும் பெண்மணிக்கு இது மிகவும் முக்கியமானது.
கேர்ஃப்ரீ: உங்களுக்கு முழுமையான உறுதி தரும் பாதுகாப்பு.






லாபகரமான 18 நேப்கின்கள் கொண்ட எகானமி பேக் வாங்குங்கள்.

© J&J 76

## கேர்ஃப்ரீ:
## உங்களுக்கு முழுமையான உறுதி தரும் பாதுகாப்பு.

*சானிடரி நேப்கின்களின் வர்த்தகப் பெயர். கேர்ஃப்ரீ மற்றும் ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன், யு. எஸ்.ஏ.-யின் டிரேட்மார்க்குகள்.

Johnson & Johnson*

டிராது. சீரான வாழ்வும் சிறப்பான வருவாயும் கிட்டியிருந்தால், இன்று இந்த நிலைக்கு அவன் ஆளாக வேண்டிய அவசியம் என்ன? அப்பப்பா! அவன் வாழ்க்கையில்தான் எத்தனை இடர்ப்பாடுகள்; இடுக்கண்கள்! அவனுக்காக நான் அநுதாபப்பட்டேன். ஆனால் நீதிமன்றத்தில் எனக்காக அப்படி ஒரு வியப்பு காத்திருக்கப் போகிறது என்று அது வரையில் எனக்குத் தெரிந்திருந்தால்தானே? அநுதாபத்தை மேவியது ஆச்சரியம்!

முழு விவரமும் தெரிந்துகொள்ள ஒரு முறையாவது சரயுவைப் பார்க்க வேண்டும் என்று எண்ணினேன். ஆனால் அடுத்த கணமே மாற்று யோசனை ஒன்று தோன்றியது. மல்லிக் சாஹப்பின் வீட்டைத் தேடிக் கண்டுபிடித்து அவரையே விசாரிக்கலாமே! நடந்தது அத்தனையையும் நன்றாகத் தெரிந்து கொள்ள அதுதான் நல்லது என்று தோன்றியது. நிசிகாந்தன் கடைசிவரை அவர் வீட்டில்தான் இருந்தானா? சரயுவையும் நிசிகாந்தனையும் பற்றி மல்லிக் சாஹப் சொன்னதெல்லாம் வெறும் புளுகுதானா? அல்லது அவரைப் புளுகர் ஆக்க அவர்கள் நடித்த நாடகமா? முழு விவரத்தையும் தெரிந்து கொள்வது அவசியம் என்று முடிவுக்கு வந்தேன்.

பாளிஹாடி தோட்டத்தில் சரயுவுக்கும் எனக்கும் நடந்த சந்திப்பின்பொழுது அவள் சொன்னதைக் கொண்டு பார்த்தால் மல்லிக் சாஹப்தான் மட்டரகமானவராக இருக்க வேண்டும் என்று பட்டது.

'அப்படியானால் நிசிகாந்தன் குற்றமற்றவனா?' அப்படி ஒரு முடிவுக்கு வர வேண்டுமென்றால் அதற்கு ஒரு முகாந்தரம் வேண்டாமா? அதைப் பற்றியெல்லாம் மூளையைச் செலவிட்டுச் சிந்தித்துக் கொண்டிருக்க எனக்குப் பொழுது எங்கே இருந்தது? அதனால் தெரிந்ததைத் தெரிந்தவரையில் சொல்லிவிடுவது என்று தீர்மானித்தேன். என்னைப் பொறுத்த வரையில் நிசிகாந்தனுக்குத் தூக்குத் தண்டனை கிடைத்தாலும் ஒன்றுதான்; நிசிகாந்தன் குற்றமற்றவன் என்று நிரூபணமானாலும் ஒன்றுதான். அதனால் நான் காணப்போகும் லாப நஷ்டம் ஏதும் இல்லை. அவனுடைய நன்மை தீமையோடு உலகில் உள்ள மற்றவர்களுடைய நன்மை தீமைக்குச் சிறிதும் சம்பந்தமே இல்லை. அதனால் எனக்கு ஆகப்போவது எதுவும் இல்லை. நானோ எதிலும் ஒட்டாத மனிதன். சம்பவச் சுழற்சியிலே இவர்களோடு எப்படியோ ஒட்டிக்கொண்டேன். இதுபோல ஆயிரம் ஆயிரம் பேரோடு எத்தனையோ முறை ஒட்டுதலும் ஏற்பட்டிருக்கிறது. வெட்டுதலும் ஏற்பட்டிருக்கிறது. எனவே, நான் எதற்கு ஒருவரோடு இணைய வேண்டும், பிறரோடு பிணங்க வேண்டும்? யாரையும் நாம் இகழவும் வேண்டாம், புகழவும் வேண்டாம் என்ற முடிவுக்கு வந்து யாரையும் போய்ப் பார்ப்பதில்லை என்று தீர்மானித்தேன். அதனால் நீதிமன்றத்திலிருந்து அழைப்பு வந்த அன்றைக்கு நேரே அங்கேயே போய்ச் சேர்ந்தேன். (தொடரும்)

# திறமைக்குக் கௌரவம்

புகழ்பெற்ற ஸிம்ஸன் கம்பெனிகளில் முக்கியமானதும், பெங்களூரிலிருந்து இயங்கும் மோட்டார் பாட்டரி உற்பத்தித் தொழிலில் உயர்ந்ததுமான ஆம்கோ பாட்டரி கம்பெனியின் நிர்வாக டைரக்டர் திரு எஸ். சந்தானம், இந்திய பொறிஇயல் தொழில் சங்கத்தின் தலைவராக 1977-78 ஆண்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்பதைக் கேட்டு மகிழ்கிறோம்.

இச் சங்கம் இந்தியா முழுவதும் இயங்கிக் கொண்டிருக்கும் சிறிய, பெரிய, மிகப் பெரிய பொறி இயல் (Engineering) தொழிற்சாலைகளைப் பிரதிநிதியாகக் கொண்டது. சுமார் 1200 தொழிற்சாலைகள் இதில் அங்கம் வகிக்கின்றன. ஒவ்வொன்றும் தனது துறையில் சிறந்தது. தனியார் துறைத் தொழிலகங்கள் மட்டுமின்றி, சர்க்கார் துறை பெரு நிறுவனங்களாகிய பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ், ஹிந்துஸ்தான் ஸ்டீல், எச். எம். டி., இந்தியத் தொலைபேசி உற்பத்தி முதலியவைகளும் இச் சங்கத்தின் அங்கத்தினரே. இதன் அங்கத்தினர் — தொழிற்சாலைகளில் முதலீடு செய்யப்பட்டுள்ள மூலதனம் சுமார் 5,500 கோடி. இவற்றில் 12 லட்சம் தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர். இச் சங்கம் டில்லியிலிருந்து இயங்குகிறது. பிராந்திய ஸ்தாபனங்கள், பம்பாய் கல்கத்தா, சென்னை முதலிய இடங்களில் செயலாற்றி வருகின்றன.



கொள்கை சம்பந்தமாகவும், செயல் முறை சம்பந்தமாகவும், இத்துறையின் பிரதிநிதியாக அரசாங்கத்துடன், அவ்வப்போது நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள ஸ்தாபனம் இது.

இந்தச் சங்கத்துக்குத்தான் தலைவராக திரு எஸ். சந்தானம் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். தொழில் நிர்வாகத்திலும் பொறி இயல் நுட்பங்களிலும் பரந்த அனுபவமும் ஆழ்ந்த அறிவும் உள்ளவர். அமெரிக்க ஹார்வர்ட் கலாசாலையில் உயர் நிர்வாகக் கல்வி பயின்ற மிகச் சில இந்தியர்களுள் திரு எஸ். சந்தானம் ஒருவர். யூனியன் கார்பைட் என்ற சர்வதேசத் தொழில் ஸ்தாபனத்தின் இந்திய நிறுவனத்தில் 20 ஆண்டு காலம் சிறப்புப் பணி ஆற்றியவர். 1967-ல் ஆம்கோ பாட்டரி ஸ்தாபனத்தில் சேர்ந்து 1969ல் அதன் நிர்வாக டைரக்டராக உயர்ந்தார். இக் கம்பெனியின் செழிப்புக்கு திரு சந்தானத்தின் பங்கு மிக அதிகம். அவருடைய இந்தக் கௌரவப் பதவிக் காலம் இந்திய என்ஜினீரிங் தொழில் துறைக்குப் பொற்காலமாக விளங்கட்டும்.




**வ**டக்கே இருந்து வரும் யாத்திரீகர் அவர். வயிற்று நோயினால் கஷ்டப்பட்டார். தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகியவற்றைத் தரிசித்துக் கொண்டே வந்தால், நோய் தீர வழி உண்டு என்று யாரோ கூறியிருக்கிறார்கள். பரிஹாரி ஒன்று கூறினால் அதை நோயாளி கேட்பது தானே வழக்கம்? அந்த மரபைப் பின்பற்றித் தென் இந்திய யாத்திரைக்கு வந்திருக்கிறார் அவர். செங்கற்பட்டு—காஞ்சிபுரம் மார்க்கத்தில் உள்ள பழைய சீவரம் என்னும் ஊரில் ஓரிரவு தங்கியிருக்கிறார். கனவில் தோன்றிய பெருமாள், ''இங்கே பூமியைத் தோண்டு. அபூர்வமானதொரு கல் விக்கிரகம் கிடைக்கும். அதை வழிபடு. இங்குள்ள திருக்குளத்து நீரை அருந்து. உன் வயிற்று நோய் தீர்ந்து விடும்!' என்று கூறி மறைந்திருக்கிறார்.

கனவு பொய்க்கவில்லை. தோண்டிப் பார்த்த இடத்தில், மடியில் ஸ்ரீ லக்ஷ்மி தேவியைத் தூக்கி வைத்துக் கொண்டு நரசிங்கப் பெருமாள் சேவை சாதித்தார். திருக்குளத்து நீரே அருமருந்தாக அவர் நோய் நீக்கியிருக்கிறது! இப்படியாகப் பழைய சீவரம் . தீர்த்தம், மூர்த்தம், தலம் ஆகியவற்றால் விசேஷப் பெருமை பெற்றிருக்கிறது. அதோடு தெற்கு வடக்கு என்ற பேதம் இல்லையென்பதையும் நிரூபிப்பதே போல் கடந்த மூந்நூறு ஆண்டுகளாகக் குஜராத்தியர்களே இக்கோயிலின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருக்கிறார்கள்; அந்த யாத்திரீகரின் வம்ச பரம்பரையினராக!

குன்றின் அடிவாரத்திலிருந்து கொஞ்சம் மேலே போனால், ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மரின் ஆலயம். ஸ்ரீ காஞ்சி ஆசாரிய ஸ்வாமிகள் ஸ்ரீ அஹோபில மடம் ஜீயர் ஸ்வாமிகள் ஆகியோருடைய ஆணைப்படி இவ்வாலயத்தின் திருப்பணி இப்பொழுது வெகு அருமையாக நடைபெற்று வருகிறது.

நூற்றறுபது படிகள் மேலே ஏறினால் ஒரு மண்டபம். இந்த மண்டபத்துக்கு ஆண்டு தோறும் ஒருநாள் காஞ்சி வரதராஜப் பெருமாள் பல்லக்கில் விஜயம் செய்கிறார். பரிவேட்டை என்று போற்றப்படும் இவ்வுற்சவம் மகர சங்கராந்திக்கு மறுநாள் நடைபெறுகிறது. அப்பொழுது வரதராஜனின் சாந்நித்தியத்தினால் மகிழ்ந்து பக்தர்கள் அருமையான வன போஜனமும் நடத்துகிறார்கள்.

இவர் இங்கே வந்து போவதற்கு ஒரு வரலாறும் வழங்குகிறது. பூரி ஜகந்நாதரைப் போல் இவர் அத்தி மரத்தில் ஆனவராக இருந்தாராம். இவரைச் சிலா வடிவமாகச் சமைக்க இந்தக் குன்றத்தின் கல்தான் பயன்படுத்தப் பட்டதாம். எனவே, பிறந்த இடமான இந்தச் சீவரத்தை மறக்காமல் ஆண்டுக்கு ஒருமுறை வந்து போகிறாராம்.

இந்த மண்டபத்திலிருந்து சிறிது தொலைவில் ஸ்ரீ வைத்யநாத ஸ்வாமி ஆலயம் சிலமாகி மூர்த்தமின்றிக் கிடக்கிறது. என்றாலும் சைவ — வைஷ்ணவ ஒருமைப்பாட்டுக்கு இலக்கணமாகவும் இலக்கியமாகவும் ஒரு காலத்தில் இத்தலம் திகழ்ந்திருக்கிறது என்பதற்குச் சீவரக்குன்று ஒரு சான்று.

ஸ்ரீ நரசிம்மர் மகாலக்ஷ்மியை மடியில் வைத்துக் கொண்டிருப்பதால் இந்தத் தலத்துக்கு ஸ்ரீபுரம் என்று பெயர் ஏற்பட்டிருக்கலாம். அதுவே மருவி சீவரமாகி யிருக்கலாம். என்றாலும் 'பழைய' என்னும் அடைமொழி வரக் காரணம் என்ன? இந்தக் கேள்விக்கு இங்கிருந்து ஸ்ரீ காஞ்சிக்குக் குடியேறிய ஸ்ரீ வரதராஜப் பெருமாள்தான் விடையளிக்க வல்லவர்!

இருவரையும் இணைத்து நிற்கும் இக்கோவில் திருப்பணி செவ்வனே நடைபெற வேண்டுமானால், பக்தர் குழாம் பேருதவி புரிய வேண்டும். வரிவிலக்கு அளிக்கப்பட்டுள்ள இத் திருப்பணிக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் அணுக வேண்டிய முகவரி: **பழைய சீவரம் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மர் ஆலயத் திருப்பணிக் குழு. ஹரித்வார்', 96, பூந்தமல்லி நெடுஞ்சாலை, சென்னை-600010.**

— ரா. வீ.



# இளவேனில் பருவம்.....



தேசிய சாம்பியன்ஷிப், விம்பிள்டன், டேவிஸ் கப், கிராண்ட்—ப்ரீக்ஸ், உலக சாம்பியன் பட்டங்கள் மூன்றையும் ஒருங்கே பெறும் வாய்ப்பு—இவைதான் எட்வர்டின் கனவுகள்; உணர்ச்சிகள் மொட்டுக்களாக இருந்த இளமைப் பருவத்துக் கனவுகள். அவை ஒவ்வொன்றாக இப்போது இதழ் விரிந்து கொண்டிருந்தன.

இருவருமே கல்லூரிப் படிப்பில் ஓரளவு முன்னேறிய பிறகு, விடுமுறைக்கு எட்வர்ட் வந்திருந்தபோது நடந்த நிகழ்ச்சி அது. மெல்லிய குளிர் காற்றை அனுபவித்தபடி இருவருமாகச் சைக்கிளில் வென்லாக் பாலம்வரை பேசிக் கொண்டே போனார்கள். அங்கிருந்து நடந்தே காட்டேரியாறும், குன்னூர் ஆறும் அருவியாகப் பொழியும் காட்சியைப் பார்க்கப் போனபோது—

கைக்கு எட்டாத உயரத்தில் பாறை முகப்பில் இரத்தப் பூவாய் ஒரு மலர் தலையை ஆட்டிச் சிரித்துக் கொண்டிருந்தது.

''எட்வர்ட்! எனக்கு அது வேண்டுமே?'' என்று சொல்லிப் பார்வை கெஞ்ச அவனைப் பார்த்தாள் மார்கரெட். அவன் குதித்துமுயன்று பார்த்தான். பூவை எட்ட முடியவில்லை. சைக்கிளை அவள் பிடித்துக்கொள்ள, அதன் மேல் ஏறி நின்று எட்டி எப்படியோ பூவைப் பிடித்துப் பறித்து விட்டான்.

''இதை நானே தலையில் வைக்கட்டுமா மார்கரெட்?'' என்று கேட்டான் எட்வர்ட்.

''நான் பூவை மட்டும்தானே கேட்டேன்?'' என்று அதைக் கையிலேயே வாங்கிக்கொண்டாள் அவள். சைக்கிளைத் தள்ளிக்கொண்டே இருவரும் நடந்தார்கள். அவள் கூந்தலில் சிவப்புப் பூ சிரித்துக் கொண்டிருந்தது. அவள் இதழ்களிலும் ஒரு சின்னச் சிரிப்புத் தெறித்தது.

''நான் கேட்டது புரியவில்லையா மார்கரெட்?''

''புரிகிறது எட்வர்ட். ஆனால் எனக்கு அவகாசம் இல்லை. எனக்கு என்று ஒரு வாழ்க்கை இருக்கிறது. அடைய வேண்டும்

நீலவானத்தின் அழகுக்கு மெருகு தந்தாற்போலக் கொன்னையாகப் பூத்துச் செறிந்திருந்த ஜகரண்டா மரம். படிப்படியாகக் கீழிறங்கி புல்வெளியில் ஆங்காங்கே மாணிக்கம் பதித்ததுபோல அந்த ஜகரண்டா நிறப்பூக்கள். விழித்து எழுந்திருக்கத் தோன்றாமல் தலையணையில் சாய்ந்து கொண்டாள் மார்கரெட். குழந்தை மூச்சுப் போன்ற மெலிந்த காற்று இமையோரங்களில் புகுந்து விழிகளைக்குளிரச் செய்தது.

அந்த இளங்காலை நேரத்தில் எட்வர்ட் டென்னிஸ் ஆடிக் கொண்டிருப்பான். உடம்பின் அழகு தெரிய வெள்ளைக் கால்சட்டையும் கால்சராயுமாக, வியர்க்க விறுவிறுக்க டென்னிஸ் மட்டையை நீட்டிக் கொண்டு, கோர்ட்டில் குறுக்கே பாய்ந்து ஓடிக் கொண்டிருப்பான். இந்தத் தடவையும் இளவேனில் வந்துவிட்ட தன் அடையாளமாக ஜகரண்டா பூத்துக் குலுங்குகிறது. ஆனால் எட்வர்ட் தான் இல்லை.

சிறு வயதிலிருந்தே அவர்கள் இருவரும் ஒன்றாகப் பழகியவர்கள்தாம். மெடிகல் காலேஜில் படிப்பு, சர்ஜரியில் மேல் படிப்பு, புகழ் பெற்ற ஆஸ்பத்திரியில் முக்கியமான பதவி, வேதனையில் துடிப்பவர்களுக்கு ஆறுதல் தரும் கைநுட்பம் — இவைதான் அவளுடைய ஆசைகள்; அந்த வயதிலிருந்தே.

என்று சில ஆசைகள் இருக்கின்றன. அதற்குப் பிறகுதான் இன்னொருவருக்கு நான் என்னை விட்டுக் கொடுக்க முடியும். முதலில் நான் ஒரு பெண்—அப்புறம்தான் மனைவி!''

''என்னுடைய படிப்பு இன்னும் இரண்டு மாதங்களில் முடிந்துவிடும். அப்புறம் டென்னிஸ் பந்தயங்களில் ஆடுவதற்கு நான் டில்லி, பம்பாய், கல்கத்தா என்று சுற்றிக் கொண்டிருப்பேன். டாக்டராக வேண்டும் என்று நீ கல்லூரி வாசலுக்குள் புகுந்து விட்டிருப்பாய். இரண்டு வேறு உலகங்களில் நாம் இருவருமே நம்மை மறந்து விடுவோம். அதுதான் உன் விருப்பமா மார்கரெட்?''

''அப்போதுகூட நமக்கிடையே ஓர் ஒற்றுமை உண்டு. நீங்கள் வெண்ணிற உடையுடன் விளையாடிக் கொண்டிருப்பீர்கள். நான் வெள்ளை ஓவர்கோட் அணிந்து லாபரெடரியில் சோதனைகள் செய்து கொண்டிருப்பேன்'' என்று சிரித்தாள் மார்கரெட்.

மரங்களிலிருந்து இலைகளின் ஓசைகள் ஆசி தாவினாற்போல் உதிர்ந்தன.

''ஸோ—'' என்று கையை நீட்டினான் எட்வர்ட்.

''இப்போது இல்லை!'' என்று கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள் மார்கரெட்.

இப்போது நினைத்தாலும் அந்த நிகழ்ச்சி, அதன் பின்னணியாய்ப் புதுப் புது அர்த்தங்களோடு நெஞ்சின் பின்னரங்கில் எழுந்து மறைகிறது. வானத்தின் வர்ண வெள்ளத்தில் தோன்றி மறையும் சாயங்களைப் போல், எண்ணங்கள் எத்தனையோ விதமாக உருவெடுத்து மறைகின்றன.

மார்கரெட் அதற்குப் பிறகு பல தடவை அவனைச் சந்தித்திருக்கிறாள். தனியாக, பலர் முன்னிலையில், வீட்டில், கிறிஸ்துமஸ் மரத்தடியில் சாக்லேட் பெட்டியுடன்; செயின்ட் ஆன்டனி சர்ச்சில் பக்கத்தில் அமர்ந்து பிரார்த்தனை செய்யும்போது என்று! ஆனால் அப்புறம் ஒரு தடவைகூட அவன் அவளிடம் அந்தக் கேள்வியைக் கேட்கவில்லை. அவளுக்கும் பதில் சொல்ல வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது...

அன்று வெலிங்டன் சர்வ கலாசாலையில் நடந்து போய்க் கொண்டிருந்தாள். அவளை யாரோ பெயர் சொல்லி அழைக்கும் சத்தம் கேட்டது. திரும்பியதும் முகம் புரிந்து விட்டது. எட்வர்டின் தந்தைதான் அவர். வயது எழுபது ஆகிவிட்டது. குறையான கண் மறைப்பு. நெற்றியில் விரல்களைப் படுக்கையாக வைத்து உற்றுக் கவனித்தபடி கேட்டார்.

''ஜோஸப்பின் பெண்தானே நீ?''

''எஸ் ஸார்—''

''டாக்டருக்குப் படிக்கிறாய் இல்லையா? எட்வர்ட் சொல்லுவான் உன்னைப் பற்றி.''

'அப்படியா? வீட்டில் கூட என்னைப் பற்றிப் பேசுவதுண்டா? அந்தச் சிந்தனைக்குக்கூட நேரம் இருக்கிறதா?' என்று எண்ணிக் கொண்டாள் மார்கரெட்.

''அடுத்த வாரம் வருகிறான். ஒரு வாரம் இருப்பான்'' என்றார் அவர்.




'எட்வர்ட் வந்தால் சொல்லுங்கள். எங்கள் வீட்டுக்கு வரச் சொல்லி ஞாபகப் படுத்துங்கள்' என்று சொல்ல எண்ணினாள். ஆனால் வாய் வரவில்லை. அவளுக்கு ஒரு சுய வட்டம் இருக்கிறதே? அதைவிட்டு அவள் மட்டும் ஏன் அதைக் கடந்து வெளியே வரவேண்டும்?

எட்வர்ட் வந்து போய் விட்டான். அவர்கள் வீட்டுக்கு வரவில்லை. அவளைச் சந்திக்கவும் இல்லை. விடுமுறை முடிந்து கல்லூரிக்குத் திரும்பியபோது மனத்தில் புரிபடாத இலேசான ஏக்கம். தூரத்து மேகம் போல மறதிப் புழுதி படர்ந்துகொண்டே அழிந்து கொண்டிருக்கும் சில கோடுகளோடு ஞாபகங்கள் நினைவுத் திட்டில் எழும்ப முயன்றன....

இரண்டுப் படிப்பு ஓடிவிட்டது.

அவ்வப்போது நியூஸ் பேப்பரில் அவனுடைய படம் வெளிவரும். அவனுடைய அரங்கில் அவன் முன்னேறிக் கொண்டிருக்கிறான். சிறியதும் பெரியதுமாகப் பரிசுகள் வந்து கொண்டிருக்கின்றன. இந்திய டேவிஸ் கோப்பைக் குழுவில் அவனுக்கு நிரந்தர இடம் கிடைத்து விட்டது.

இன்னும் ஓர் ஆண்டு. அவளுக்குப் படிப்பு முடிந்து விடும். அவனும் தன் வாழ்க்கையில் சில வெற்றிகளை எட்டி விடுவான். அப்புறம்?

அவளால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. அவனுக்கு அவள் நினைவே இல்லையோ என்னவோ? இருவருக்கும் தத்தம் வழிகளில் எதிர்காலம் காத்திருக்கலாம். அப்படியே இருந்துவிட்டுப் போகட்டுமே? மறு சிந்தனை அவசியம்தானா?

விடுமுறைக்கு வீட்டுக்கு வந்திருந்தாள் மார்கரெட்.

மறுபடியும் இளவேனிற் பருவம். நெஞ்சு கொள்ளாத உவகையைப் போல, மரங்களில் இலைகளே தெரியாமல் பூத்துச் செறிந்த ஜகரண்டாப் பூக்கள். மரத்தடியில் கல்



பாபு: ''எனக்கு பாக்கெட் மணியும், அக்காவுக்கு ஜாக்கெட் மணியும் தா.''

அப்பா: ''அது என்னடா ஜாக்கெட் மணி.''

பாபு: ''நான் பணத்தை பாக்கெட்டுல வச்சுக்கறேன். அக்கா ஜாக்கெட்டுல வச்சுக்கறா!''

• லலிதா செல்லப்பா

மேண்டயில் அமர்ந்து நேரம் போவதே தெரியாமல், ஓடி விளையாடும் அணில்களின் துரத்தலைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

பின்னால் அவள் தாய் வந்து நிற்கும் அரவம் கேட்டது. அவள் திரும்பிப் பார்க்கவில்லை. ''நேற்று எட்வர்டின் அப்பா வந்திருந்தார். இந்த வாரம் அவன் வருகிறானாம்'' என்றாள் அம்மா.

''என்ன விசேஷம் அப்படி?'' என்று மனமில்லாது பேசுபவள் போலக் கேட்டாள்.

''அவருக்குப் பயம். பையன் உலகமெல்லாம் சுற்றிக் கொண்டிருக்கிறானே? எங்கேயாவது ஒரு மேல்நாட்டுப் பெண்ணை மருமகளாகக் கொண்டு வந்து நிறுத்திவிடுவானோ என்று ஒரு கலக்கம்.—''

''அதற்காக?'' — அவள் குரல் இப்போது மெய்யெனவே குழைந்தது. அம்மா கவனித்திருப்பாளோ?

''இந்த வாரம் கோயம்புத்தூரில் ஒரு பெண்ணைப் பார்த்து நிச்சயம் செய்வதாக இருக்கிறாராம். அதை என்னிடம் தேடி வந்து சொல்வானேன்? அதுதான் எனக்குப் புரியவில்லை.''

அம்மாவுக்கா புரியவில்லை? யாரை நாடி பிடித்துப் பார்க்கிறாள்? அவள் தன் கண்களை ஏன் அப்படி உற்றுப் பார்க்கிறாள்? மார்கரெட் பதில் சொல்லவில்லை. அம்மா பெருமூச் செறிந்தபடி எழுந்து போய்விட்டாள்.

இரவு நேரம். இலேசான குளிர் பூப்போலக் காற்றில் உதிர்ந்து கொண்டிருந்தது. அம்மா கணப்பு அடுப்பின் அருகில் உட்கார்ந்து ஏதோ காகிதங்களைக் கிழித்துப் போட்டுக்கொண்டிருந்தாள். மெல்லிய கம்பளி ஒன்றைப் போர்த்திக் கொண்டு மார்கரெட் அவள் அருகில் போய் உட்கார்ந்தாள்.

''என்னம்மா செய்கிறாய்?''

''இன்று பிற்பகல் பொழுது போகாமல் பழைய பெட்டிகளை ஒழித்துக் கொண்டிருந்தேன். என்னென்னவோ கிடைத்தது. இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் நான் எழுதிய டைரிகூடச் சில இருந்தன. அவற்றைக் கிழித்துப் போட்டு எரித்துக் கொண்டிருக்கிறேன்'' என்று விரல்களை யோசனையாகக் குவித்துவிட்டுப் பிரித்துக் கொண்டாள் அம்மா.

''அந்த நாளைய டைரியா? நான் ஆவலாகப் படித்திருப்பேனே?''

''படித்து ஒன்றும் பிரயோசனமில்லை. அந்நாளைய ஆசைகள் அப்போதே கருகிப் போய்விட்டன. டைரி மட்டும்தான் இப்போது கருகிக் கொண்டிருக்கிறது.''

''என்னம்மா சொல்கிறாய்?'' என்று அங்கே அமர்ந்து அவள் முகத்தைத் திருப்பிப் பார்த்தாள் மார்கரெட்.

''அப்போது எனக்குப் பதினேழு வயது. என் அப்பா இங்கே தேயிலை எஸ்டேட்டில் மானேஜராக இருந்தார். என்னைக் கிளப்புக்குக்கூட அழைத்துக் கொண்டு போவார். அங்கே ஆர்தர் என்ற இளைஞனைச் சந்தித்தேன். பார்க்க உயரமாய், அழகாக இருப்பான். பார்வையிலேயே ஒரு கம்பீரம் இருக்கும். அளவாகத்தான் பேசுவான். அப்பாவுடன் 'பிரிட்ஜ்' ஆட அவன்தான் சரியான ஜோடி. எனக்கும்கூட 'பிரிட்ஜ்' ஆடக் கற்றுக் கொடுத்தான். பழக்கம் தொடர்ந்தது.''

''அப்புறம்?'' என்று கண்ணிமைகளை அடித்து முறுவல் செய்தாள் மார்கரெட்.

''ஒரு சீஸன் முடிந்து, நட்பு இரண்டாவது சீஸனிலும் தொடர்ந்தது. ஒரு நாள் நாங்கள் இருவரும் காலாற நடந்து போய்க்கொண்டிருக்கும்போது ஆர்தர் என் மனத்தைப் புரிந்து கொள்ள விரும்புவது போலக் கேட்டான். நான் பிடி கொடுத்துப் பதில் சொல்லவில்லை.''

''ஏன்?''

''அவனுக்கு விமானப் படையில் சேர ரொம்ப ஆசை. எனக்கு விமானம் என்றாலே பயம். அவனை மணந்து கொண்டு அந்தப் பயத்துடனேயே வாழ எனக்கு விருப்பமில்லை. எனக்காக அந்த ஆசையை விட்டுக்கொடுக்க அவனுக்கு விருப்பமில்லை.''

''அப்புறம்?''

''அப்புறம் நான் உன் அப்பாவை மணந்து கொண்டு விட்டேன். வாழ்க்கை எப்படியோ சரியாகி விட்டது. இருபது வருஷங்கள் கவலையே இல்லாமல் ஓடிவிட்டன. திடீரென்று உன் அப்பா இருதய அதிர்ச்சியில் கண்ணை மூடி விட்டார். எனக்கு நீமட்டுமே துணையானாய். அதற்குப் பிறகு சில சமயம் நான் நினைத்ததுண்டு. விமானத்தில் ஏறிப் பணி புரிபவரின் ஆயுள் எப்படி இருக்குமோ என்று நான் பயந்தேன். அவர் இன்னும் சுகமாக இருக்கிறார். ஆனால் நிம்மதியான வாழ்க்கைக்காக நான் ஒருவரைத் தேடிக் கொண்டேன். அவர் என்னை விட்டு விட்டுத் திடீரென்று போய் விட்டார். அன்று நான் செய்த முடிவு' சரிதானா? நான் எனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டேனா? ஒரொரு சமயம் என் மனம் குழம்புவதுண்டு; கண் கலங்குவதுண்டு'' என்று நிறுத்தினாள் அம்மா.

பிறகு மார்கரெட்டின் தோள் மீது கையை வைத்துப் பேசினாள் அம்மா. ''வாழ்க்கையில் சந்தர்ப்பங்கள் ஒரு முறைதான் வரும். அவற்றைப் பயன்படுத்திக் கொள்வதும் விட்டு விடுவதும் நம் கையில்தான் இருக்கிறது. இதை அன்று சொல்ல எனக்கு அம்மா உயிருடன் இல்லை. ஆனால் உனக்கு நான் இருக்கிறேன். இந்த ஜகரண்டா மரத்தைப்

# வளரும் பருவம்
# கால்ஷியம்-ஸாண்டோஸ்® பருவம்

வளர்ச்சி நின்றுவிட்ட பிறகு, எவ்வளவு கால்ஷியம் சாப்பிட்டாலும் பற்கள் வலுவாகவும், எலும்புகள் ஆரோக்கியமாகவும் வளர உதவ முடியாது.

ஒழுங்காக கால்ஷியம் வில்லைகள் சாப்பிட்டு வரும் குழந்தைகளின் வளர்ச்சி மற்ற குழந்தைகளைவிட, அதிவேகமாக இருக்கிறது என்றும் அவர்களுக்கு அதிக எடை கூடுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள்* நிரூபித்துள்ளன. உண்மையில், வளரும் பருவம் கால்ஷியம்-ஸாண்டோஸ் பருவம்!

பற்கள் ஆரோக்கியமாகவும், எலும்புகள் உறுதியாகவும் அமைந்து வளர்வதற்கு கால்ஷியம்-ஸாண்டோஸ் வில்லைகள் துணை புரிகின்றன. வைட்டமின் C, D மற்றும் B12 ஆகிய சத்துக்களால் வளமூட்டப்பட்ட, ராஸ்ப்பெர்ரி சுவை கொண்ட கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகள் ருசிமிக்கவை. குழந்தைகளுக்கு மிகவும் பிரியமானவை!

**கால்ஷியம்-ஸாண்டோஸ்-ஸ்விட்ஸர்லாந்தில் ஸாண்டோஸ் உருவாக்கியுள்ள, உலகிலேயே தலை-சிறந்த கால்ஷியம்.**

*கால்ஷியம் சப்ளிமென்டேஷன் டெஸ்ட்ஸ்-டாக்டர் டபிள்யு. ஆர். அக்ராயிட் மற்றும் டாக்டர் பி.ஜி. கிருஷ்ணன் சமர்ப்பித்துள்ள ஆராய்ச்சித் தாள்.







## கால்ஷியம்-ஸாண்டோஸ்®
### வலுவுள்ள பற்களுக்கும், உறுதியான எலும்புகளுக்கும்




daCunha/CS/20 N TAM



கல்கத்தா ஹிந்துஸ்தான் பில்கிங்டன் கிளாஸ் ஒர்க்ஸ் லிமிடெட்டின் தென் விந்திய ஏஜண்டு ஸ்ரீ G. S. ராகவன் அவர்களின் குமாரன் செஞ்சிவி T. R. ராமஸ்வாமிக்கும் திருச்சி ஸ்ரீ T. S. ஜெகன்னாதன் (Southern Railway D.E.E's Office) அவர்களின் குமாரத்தி சௌ. உஷாவுக்கும் 15-5-77 அன்று சென்னை தர்ம பிரகாஷ் கல்யாண மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

பார்த்தாயா? எவ்வளவு அழகாக ஊதா நிறச் சொரிவாய்ப் 'பூத்துக்' குலுங்குகிறது? ஆனால் இது இந்தப் பருவத்துக்குத்தான். இது முடிந்ததும் எல்லாமே உதிர்ந்து வெறிச் சென்று ஆகிவிடும். அப்புறம் யாரும் அதைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டார்கள். ஒரு பெண்ணின் வாழ்க்கையிலும் அப்படி ஒரு முறைதான் வசந்தம் வரும். இளமை அழகு குலுங்கும். அது பச்சை முற்றிப்போய்விட்டால் அப்புறம் அவளுக்கு அனுதாபம்தான் மிஞ்சும்.''

அம்மா பேச்சை நிறுத்தி விட்டாள். ஆனால் அந்தக் குரலின் கார்வை அவள் நெஞ்சில் இன்னும் சூழ்ந்து கொண்டிருந்தது. பேச முடியாமல் உணர்ச்சிகள் கோலமிட்டுக் கொண்டிருந்தன. மார்கரெட் எழுந்து, உள்ளே படுத்துக்கொள்ளப் போய் விட்டாள். நெடுநேரம் தூங்க முடியவில்லை. இருளில் காட்டும் அடையாளமாய், அம்மாவின் பேச்சு காதில் ஒலித்துக் கொண்டேயிருந்தது....

ஒரு வாரம் நழுவியது தெரியவில்லை.

**கா**லை நேரம். அவள் காலாற நடந்துவர லிம்ஸ் பார்க் வரையில் போயிருந்தாள். பனி படர்ந்த புல்வெளியைப் பார்த்தபோது உள்ளே நடந்துவிட்டு வரவேண்டும் போல் ஓர் ஆசை. நெடிதுயர்ந்த மரங்கள். புல் மெத்தைப் 'படிக்கட்டுக்கள், சிரிக்கும் ரோஜாப் பூக்கள். இரகசியமாக நலுங்கும் நீரோடை.. சிலிர்த்துச் சிறகடித்துப் பறக்கும் பறவைகள்.

மரகதப் பசுமை படர்ந்த மேட்டின் மீது இரு ஜகரண்டா மரங்களுக்கு இடையில், உலகப் படத்தைக் கிரைக் கன்றுகளால் அமைத்திருந்தார்கள். அதன் அழகை வியந்து கொண்டே நின்று விட்டாள் மார்கரெட். அவளையும் அறியாமல் ஒரு தாபம் எழுந்து உள்ளத்தில் அலை மோதிற்று. அந்த உருவில் கண் பார்வை மங்கி அமிழ்ந்தது.

அவளுக்கு இன்னொரு சந்தர்ப்பம் மீண்டும் கிடைக்குமா? இந்த உலகப் படத்தில் எட்வர்ட் இன்று எங்கே இருக்கிறான்? அவன் மனத்தில் அவளைப் பற்றிய சிந்தனை துளியேனும் இருக்குமா? இதைப் போல ஒரு கணமாவது அவன் மனமும் பரிதவித்து நிற்குமா?

சர்ச்சிலிருந்து மணியோசை கேட்டது. விரைவில் அங்கே மண விழாவின் மணியோசை முழங்கும். எட்வர்ட் மணமகளைப் படி ஏறிக் கொண்டிருப்பான். அவன் கையைப் பற்றி, வெண்ணிற உடை அணிந்து வெண்ணிற முகத்திரையின் சல்லாவினூடே, வெட்கப் பார்வையாய் நடந்து வரும் அந்தப் பெண்—

அதற்கு முன் எட்வர்ட் அவளைச் சந்திப்பானா?

''ஹலோ! மார்கரெட்!'' என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்க்காமலே அந்தக் குரல் தெரிந்து விட்டது.

''உன்னைத்தான் தேடிக் கொண்டிருந்தேன். நீ இங்கே வந்திருப்பதாக அம்மா சொன்னாள்'' என்று சொல்லிக் கொண்டே, நாலெட்டாய்த் தாண்டி அருகில் வந்து நின்றான் எட்வர்ட்.

எதற்காக? திருமண அழைப்பிதழ் கொடுக்கப்போவதைச் சொல்லவா? கோயமுத்தூருக்கு வரச்சொல்லி அழைக்கவா? உள்ளே ஏதோ கிளர்ந்து பொங்கிற்று. தலையைக் குனிந்து கொண்டாள். அவன் அவள் கையை எடுத்துக் கொண்டான்.

''நீயாகவே மறுபடியும் என்னிடம் மனம் திறந்து பேசுவாய் என்று எதிர்பார்த்தேன், மார்கரெட். அது நடக்கவில்லை. ரொம்பப் பிடிவாதம் உனக்கு. நானும் அப்படியே இருந்திருக்கலாம். ஆனால் மறுபடியும் உன்னைக் கேட்க விரும்புகிறேன். ஏனென்றால் இது ஒரு முக்கியமான சந்தர்ப்பம். நான் முடிவு எடுக்க வேண்டிய நிலை—''

அவள் நிமிர்ந்து பார்த்தாள். அவன் விழிகளில் அவள் பிம்பம் நிழலாடிற்று. அம்மா சொன்ன சந்தர்ப்பம் ... ஒரு பருவம் மட்டுமே பூத்துக் குலுங்கும் ஜகரண்டா...

''நான் இப்போது பிடிவாதம் பிடிக்க மாட்டேன் எட்வர்ட்!''

''லோ—'' என்று கையை நீட்டினான், எட்வர்ட்.

அதைப் பற்றிக் கொண்டு குலுக்கினாள் மார்கரெட்.

## தஞ்சை தரும் செஸ் சாம்பியன்

''எங்கள் குடும்பத்திலே யாருக்கும் செஸ் ஆட்டம் தெரியாது. எங்கள் அடுத்த வீட்டுக்காரர், என் மகன் பால் ஆரோக்கிய ராஜுக்கு, வேடிக்கையாக இரண்டு நாட்கள் செஸ் ஆடக் கற்றுக் கொடுத்தார். அதிலிருந்து அவனுக்கு ஆட்டத்தில் 'ருசி' கண்டு விட்டது. ஐந்து ரூபாய் செலவழித்து ஒரு செஸ் போர்டு அவனுக்கு வாங்கிக் கொடுத்தோம். பையன் படிப்பிலும் சுட்டி. செஸ் ஆட்டத்திலும் கெட்டிக்காரன்!'' என்று தம் பையனைப் பற்றித் தஞ்சை எல். ஐ. ஸி. காரியாலயத்தில் பணியாற்றும், திரு ஏ. சவரி ராஜன் பெருமைப் பூரிப்புடன் கூறினார்.

தஞ்சைப் பள்ளியில் ஏழாம் வகுப்பிலிருந்து எட்டாம் வகுப்புக்கு 'இங்கிலீஷ் மீடியம்' மாணவனுகத் தேறியுள்ள பால் ஆரோக்கியராஜ் பன்னிரண்டு வயதே ஆனவன் என்றாலும் தமிழகத்தில் இளம் ஆட்டக்காரர்களுள் முதல்வனாகவும் தேசிய வரிசையில் ஏழாமவனாகவும் இடம் பெற்றிருக்கிறான்.

''இவனுக்குச் சைக்கிள் ஓட்டுவதும், தபால் தலை சேகரித்தலும் பொழுதுபோக்கு. யோகாசனப் பயிற்சியிலும் ஆர்வம் உண்டு. செஸ் ஆட்டத்தில் வெற்றி பெற்ற இவனுக்கு, சென்னை போலீஸ் கமிஷனர் திரு செந்தாமரை கேடயம் வழங்கிப் பாராட்டினார். — குண்டுமணி



மேக் அப் உங்கள் முகத்தின்
குறைகளை மறைக்கலாம்.





# உங்கள் மேனியை தூய்மையாக்கி இயற்கை எழிலுடன் துலங்கச் செய்வது லாக்டோ-காலமைன் ஒன்றுதான்.

உங்கள் மேனியைப் பராமரிக்க லாக்டோ-காலமைன். உங்கள் மேனியைத் தூய்மையாகவும் புதுமையாகவும் வைத்திருக்கக் கூடிய சேர்க்கைப் பொருட்கள் விசேஷ முறையில் இதில் கலக்கப் பட்டுள்ளன. எல்லாம் ஒன்றில் இணைந்த அழகுப் பராமரிப்பு—லாக்டோ காலமைன் அஸ்ட்ரின் ஜெண்ட், மாயிஸ்சரைஸர், ஃபவுண்டேஷன் க்ரீம். மூன்றும் இணைந்த தன்னிகரற்ற அழகு சாதனம்.

அதனை முறையாக உபயோகித்து வரவும். உங்கள் மேனி இயற்கையாக மெருகேறுவதைக் கண் கூடாகக் காண்பீர்கள்.




3 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது:
110 மி.லி.
60 மி.லி. 28 மி.லி.

க்ரூக்ஸ் லாக்டோ-காலமைன், ஒரு ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க். இதனைத் தவறாகப் பயன்படுத்துபவர்கள் சட்டப்படி தண்டிக்கப் படுவார்கள்.



உண்மையான லாக்டோ-காலமைன் தானு என்று உறுதி செய்து கொள்வதற்கு, எப்போதும் இந்த க்ரூக்ஸ் சின்னத்தைப் பார்த்து வாங்குவீர், அதோடு, க்ரூக்ஸ் முத்திரையும் உடையாமல் இருக்கிறதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள்.

டூஃபார்-இன்டர்ஃப்ரான் லிமிடெட்
த.பெ. எண் 6582, பம்பாய்-400 018

க்ரூக்ஸ்
## லாக்டோ-காலமைன் அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

Sista's-DIL-219-P/76/Tam

**வா**சல் கேட்டைச் சாத்தும் சத்தம் கேட்டது. தலையை உயர்த்தி ஜன்னலுக்கு வெளியே பார்த்தார் அவர். சிவா தான் போய்க் கொண்டிருந்தான்.

இப்போது தானே உள்ளே வந்தான்! அதற்குள் டிபன் சாப்பிட்டு முடித்துக் கிளம்பி விட்டானு? — அப்படி என்ன வேலை கொள்ளை போகிறது?

''ராஜம்...... ராஜம்.......''

ஈரக் கையைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டே உள்ளிருந்து வந்தாள் அவள்.

''எங்கே அவசரமாக ஓடருன்....?''

''யார் கண்டது? என்னவோ இன்னிக்கு, நேரத்திலே வந்து டிபனைச் சாப்பிட்டுட்டுப் போருனே....!''

''அதுவே உனக்குப் பெரிசா தோணறு தாக்கும்....!''

''என்னை என்ன பண்ணச் சொல்லறேள்! நான் சொல்லறதை அவன் காதிலே வாங்கின்டாத் தானே....! நீங்க தான் இப்போ விட்டேட்டேன்னு ஆயாச்சு. அவனைத் திருத்தி வழிக்குக் கொண்டு வாருங்களேன். நானு வேண்டாம் என்கிறேன்.'' சொல்லி விட்டு உள்ளே போய் விட்டாள் அவள்.

கன்னத்தில் இரண்டு போட்டு, அதட்டி உட்கார வைக்கிற வயசா அவனுக்கு!

ஆவணி வந்தால் இருபத்தி நாலு வயசு முடியப் போகிறது. அவரை விட அரை அடி உயரம்! கருகருவென்று காடாய் வளர்ந்து பிடறி வரை இறங்கியிருக்கும் தலை முடியும் மீசையும் கிருதாவும்....

அவனுடைய விருப்பத்துக்கு ஏற்றாற்போல் ஒரு மருந்துக் கம்பெனியில் 'ரெப்ரசன்டேடிவ்' உத்தியோகம். சாதாரணமாகவே ஊர் சுற்றி அவன். வேலையும் ஊர் சுற்ற வேண்டிய வேலைதான். கேட்பானேன்?

இந்த வயதில் — தாம் எத்தனை பொறுப்பு உணர்ச்சியுடன் நடந்து கொண்டோம் — இவன் எப்படி எதிலும் ஒரு பொறுப்புணர்ச்சி இல்லாமல் இருக்கிருனே என்று நினைத்துக் கொண்டார் அவர்.

ஒரு வாரமாகத் தான் அவனுடைய போக்கை நன்ருகத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டிருக்கிறது.

ஆபீஸ் போய் வந்து கொண்டிருந்த நாட்களில் எல்லாம் அவனை அதிகமாகக் கவனிக்க அவருக்கு நேரம் இருந்ததில்லை. ஏதோ வேலை விஷயமாகத்தான் அவன் வெளியே சுற்றிக் கொண்டிருக்கிருன் என்ற நினைப்பில் இருந்து விட்டார். வேலையை முன்னிட்டுச் சுற்றும் நேரத்தைவிட அவன் விளையாடும் நேரம்தான் அதிகம் என்ற கசப்பான உண்மை இப்போது தான் அவருக்குப் புரிந்தது.

சினிமா, நாடகம், கிளப் என்று ஏதாவது 'என்கேஜ்மென்ட்' இருக்கும் அவனுக்கு!! இப்போது கூட எங்கோ 'மேட்னி' பார்க்கத் தான் ஓடுகிருன்.

''**இ**தைப் பாருங்கோ.....!''

ராஜம் அவர் அருகே நின்று கொண்டிருந்தாள்.

''காலையிலே வாசு மாமா வந்திருந்தார்.''

''ஊம்.....''

''வெள்ளிக் கிழமையன்னிக்குப் பெண் பார்க்கப் போகலாம்ன்னு சொல்லச் சொன்ஞர்....!''

''சிவா கிட்டச் சொன்னயா....?''

''ஒரு நிமிஷமாவது நின்னு நிலைச்சாத் தானே ஏதாவது சொல்ல முடியும்? அவன் தான் ஓடிக் கொண்டே யிருக்கானே!''

''என்னை என்ன பண்ணச் சொல்லறே, ராஜம்!'' என்று பரிதாபமாகக் கேட்டார் அவர்.

''வெள்ளிக் கிழமை பெண் பார்க்கப் போகணும். அதனலே துரை அன்னிக்கு வேறே 'என்கேஜ்மென்ட்' எதுவும் வைச்சுக்க வேண்டாம்னு சொல்லுங்கோ....''

அவர் சிரித்தார். ராஜம் முகத்தை நொடித்துக் கொண்டு உள்ளே வேகமாகப் போய் விட்டாள்.

அரட்டைக் கச்சேரி முடிந்து நண்பர்களை வழியனுப்பி விட்டுச் சிவா உள்ளே வரும் போது மணி நாலுக்கு மேல் ஆகிவிட்டது.

''சிவா.....!''

ஒரு கையினுல் தலைமயிரை படிய வைத்துக் கொண்டு நின்ற நிலையிலேயே திரும்பி அப்பாவைப் பார்த்தான். 'என்ன?' என்ற கேள்வி அவன் பார்வையில் இருந்தது.

''வர வெள்ளிக்கிழமை பெரம்பூருக்கு நாம் பெண் பார்க்கப் போகணும். தயாராக இரு....!''

''ஓ!....'' என்று சொல்லிக் கொண்டே திரும்பினுன் அவன்.

சட்டைப் பொத்தான்களைக் கழற்றி மாட்டிக் கொண்டு சிறிது நேரம் ஏதோ யோசனையில் இருந்தான். திடீரென ஏதோ முடிவுக்கு வந்தவனுக, ''நான் வரலே அப்பா!'' என்ருன் அவன்.

''வரலென்னு....?''

# பாதைகள் விரிகின்றன!

''எனக்கு இப்போ கல்யாணம் பண்ணிக்கிற எண்ணம் இல்லே!'' என்று சொல்லி விட்டு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

''நீ என்ன சொல்லறே?'' என்று இரைந்தார் அப்பா.

''என் மனசிலே பட்டதைச் சொல்றேன்!'' என்று சொல்லிக்கொண்டே எழுந்து வெளியே போய் விட்டான் அவன்.

கதவருகில் வந்து நின்ற ராஜம் ''என்னன்னு இது....?'' என்ருள்.

மூக்குக் கண்ணுடியைக் கழற்றி மேல் துண்டினுல் துடைத்துக் கொண்டு சாவகாசமாக எழுந்து நின்ருர் அவர்.

''வாசு மாமா கிட்டே நாங்க வரல்லேனு சொல்லிட வேண்டியதுதான். வேறென்ன செய்ய....?''

கோபத்தில் அவர் குரல் இறுகிப் போயிருந்தது. ராஜம் பதில் பேசாமல் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அந்த நிகழ்ச்சிக்குப் பிறகும் சிவா எப்போதும் போல்தான் இருந்தான். அப்பா கேட்டதையோ அதற்குத் தான் பதில் சொன்னதையோ ஒரு விஷயமாகவே அவன் பாவிக்கவில்லை.

அவராலும் ராஜத்தாலும் அதை அப்படி ஒதுக்கிவிட முடியவில்லை. அதற்குப் பிறகு அவர் சிவாவுடன் பேசுவதையே அறவே விட்டு விட்டார்.

அவனைப் பற்றி ராஜத்திடம் ஏதாவது பேச நேர்ந்த போது, ''உன் பிள்ளை'' என்றுதான் அவனைக் குறிப்பிட்டாரே தவிர, 'சிவா' என்று கூடக் குறிப்பிடுவதில்லை அவர்.

அவர்கள் பார்க்கப் போவதாயிருந்த பெண்ணுக்கு வேறு இடத்தில் நிச்சயமாகி விட்டதாக வாசு மாமா வந்து சொன்னார்.

ஒரு நல்ல இடம் கை நழுவிப் போய் விட்டதை எண்ணி ராஜம் தான் புலம்பிக் கொண்டிருந்தாள். அவர் அதையும் பொருட்படுத்தவில்லை.

கடைக்குட்டி வனஜாவை ஹைஸ்கூலில் சேர்க்க வேண்டும்.

சிவாவை நம்பிப் பயனில்லை.

அவனுடைய சிநேகிதன் ரமேஷின் தங்கைக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருக்கிறதாம், அதனால் சிவாவுக்கு இப்போது நேரமே இருப்பதில்லை. அப்பா ஏதாவது சொன்னால், ''ரமேஷ் பாவம். ஒண்டியாய் அலையறான்..!'' என்று அவன் உதவிக்கு ஓடி விடுகிறான்.

வனஜாவை அழைத்துக் கொண்டு ஹைஸ்கூலுக்குக் கிளம்பினார் அவர்.

'தங்கையைப் பள்ளிக்கூடத்திலே சேர்க்கிறதுக்கு நேரமில்லையாம்! யாருடைய தங்கையின் கல்யாணத்துக்கோ இவர் ஓடி ஓடி வேலை செய்யறாராம்...?' — என்று முணுமுணுத்துக் கொண்டே தான் அவர் வெளியே கிளம்பினார்.

நடையில் செருப்பைக் கழற்றிவிட்டு அவர் உள்ளே நுழைந்தபோது முகவாய்க் கட்டையை இரு உள்ளங்கைகளாலும் தாங்கிக் கொண்டு மேசையடியில் உட்கார்ந்திருந்தான் சிவா.

ஈஸிச்சேரை ஜன்னலருகில் நகர்த்திப் போட்டு உட்கார்ந்தார் அவர்.

''இடம் கிடைச்சுதா...?''

சிவாவா கேட்கிறான்?

அவருக்கு ஆச்சரியமாக இருந்தது.

''ஊம்...!'' என்றார் அவர் அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு.

''பணம் கட்டியாச்சா?'' என்று கேட்டுக் கொண்டு உள்ளிருந்து வந்தாள் ராஜம்.

''கட்டியாச்சு'' என்று அவளுக்குப் பதில் சொன்னார்.

சொல்லிவிட்டு ஜன்னலுக்கு வெளியே பார்வையைத் திருப்பிக் கொண்டார். சற்று நேரம் யாரும் ஒன்றும் பேசவில்லை.





அவன்: கண்ணே! நம் காதலுக்கு அச்சாரமாக நம் மோதிரங்களை மாற்றிக் கொள்ளலாமா?
அவள்: கொஞ்ச நாள் போகட்டுமே?
அவன்: ஏன் கண்ணே?
அவள்: முதலில் நீங்க உங்க கால் பவுன் மோதிரத்தை மாற்றி ஒரு பவுன் மோதிரம் போட்டுக் கோங்க. பின் மாற்றிக் கொள்ளலாம்!
அவன்: எதற்குக் கண்ணே?
அவள்: என் மோதிரம் ஒரு பவுனில் செய்த தாச்சே! அதனால்தான். —ல.செ.

---

ராஜத்தின் பார்வையும் சிவாவின் பார்வையும் அவர்மீது நிலைத்திருக்க, அவர் பார்வை கண்ணுக்கு வெளியே வீதிக்குப் போயிருந்தது.

''அப்பா...!''

சிவாவின் குரல்தான் அங்கே நிலவிய அமைதியைக் கலைத்தது.

அவர் திரும்பி அவனைப் பார்த்தார்.

''உங்களோடு ஒரு விஷயம் பேசணும்!''

''ஓ...!'' அவர் முகத்தில் ஓர் ஏளனப் புன்னகை அரும்பியது.

''சொல்லு...!''

அவர் முகத்தைப் பார்த்துப் பேசச் சங்கடப்பட்டுக் கொண்டு அவன் தலையைக் குனிந்து கொண்டான்.

சொல்ல நினைத்ததை எப்படி ஆரம்பிப்பது என்று சிந்திக்க அவனுக்குச் சற்று அவகாசம் தேவைப்பட்டது.

ஏதோ கதை கேட்கத் தயாராவதைப் போல, சுவரோரமாகத் தரையில் உட்கார்ந்து கொண்டாள் ராஜம்.

''சொல்லேன்....!'' என்றார் அவர். அவனுடைய தயக்கத்தைச் சகித்துக் கொள்ள அவருக்குப் பொறுமை இல்லை.

''ரமேஷின் தங்கைக்கு நிச்சயதார்த்தம் ஆயிடுத்து. ஆனால் அந்த இடத்தில் கல்யாணம் நடக்க முடியாது போல் இருக்கிறது'' என்று ஆங்கிலத்தில் தொடர்ந்தான் சிவா.

நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த அவன் அப்பா இப்போது நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு ''ஏன்?'' என்று வியப்புடன் கேட்டார்.

''இந்தச் சமூகத்தின் பொறுப்பில்லாத் தன்மைதான் காரணம்.''

பொறுப்பையும் பொறுப்பில்லாத் தன்மையையும் பற்றிச் சிவா பேசுகிறானே என்று நினைத்தபோது அவருக்குச் சிரிப்பு வந்தது.

''நான் ஸீரியஸாகச் சொல்லிக் கொண்டிருக்கிறேன், நீங்கள் சிரிக்கிறீர்களே அப்பா?''

''சரி. மேலே சொல்லு!''

''ரமேஷின் தங்கைக்குப் பார்த்திருக்கும் பையனின் அப்பாவும் அம்மாவும் 'வரதட்சிணை ஏதும் வேண்டாம்' என்று சொல்லியதால்தான் இவ்வளவு சீக்கிரமாக நிச்சயதார்த்தம் செய்தான் ரமேஷ். கல்யாணத்துக்கு நாள் பார்த்து முகூர்த்தப் பத்திரிகையும் அச்சடிக்கக் கொடுத்தாயிற்று. இப்போது பையனுடைய அம்மா ஒரு பெரிய லிஸ்டுடன் வந்திருக்கிறாள். அந்தக் காலத்தைப் போல் பித்தளை எவர்சில்வர் என்று பாத்திரத்தில் பணத்தை விணடிக்க வேண்டாமாம்!' அந்த அம்மாள் தயாரித்துக் கொண்டு வந்த லிஸ்டுப்படி பொருள்களை வாங்கினால் போதுமாம். ரொம்பச் சாமர்த்தியமாகப் பேசிவிட்டதாக எண்ணம்!''

நிதானமாகப் பேசிக் கொண்டிருந்த சிவா உணர்ச்சி வசப்பட்டு, ''அந்த லிஸ்டுப்படி வாங்குவதென்றால் பத்தாயிரம் ரூபாய் வேண்டும்! ரமேஷ் எங்கே போவான் அப்பா பத்தாயிரம் ரூபாய்க்கு?'' என்று கேட்டான்.

''விஷயத்தைச் சொல்லிச் சமாளிக்கப் பார்க்கக் கூடாதா?''

''நீ ஒண்ணு அப்பா! வரதட்சிணைதான் வேண்டாம். அதற்காக இந்தச் சாமான்களைக்கூட வாங்கிக் கொடுக்க முடியலேன்னு எங்க சம்பந்தம் உங்களுக்குக் கிடைக்காதுன்னு சொல்லிட்டாளாம்! இது பகல் கொள்ளைதானே அப்பா!''

கையை ஆட்டி ஆட்டி அவன் ஆவேசத்துடன் பேசுவதைத் தம்மையும் அறியாமல் அவர் ரசித்துக் கொண்டிருந்தார்.

''அப்படிப்பட்டவா சம்பந்தம் வேண்டாம்னு விட்டுடறது!'' என்றார் அவர்.

''அது அவ்வளவு எளிதா அப்பா? இந்தச் சமூகத்திலே நிச்சயதார்த்தம் ஆகிக் கல்யாணம் நின்னு போச்சுன்னு அந்தப் பெண்ணுக்கு அவ்வளவு எளிதா வரன் கிடைக்குமா அப்பா...? அதை நினைத்துத்தான் ரமேஷ் கலங்கறான். அவன் நிலைமையை நினைச்சா...!''

அவருக்கே சங்கடமாகத்தான் இருந்தது.

என்ன தோன்றியதோ... ''பேசாமல் ரமேஷின் தங்கையை நீயே கல்யாணம் பண்ணிண்டுடு....!'' என்று வேடிக்கையாகச் சொல்லி வைத்தார்.

''அப்பா...!''

அவன் குரல் நெகிழ்ந்து போயிருந்தது.

''நானே அந்த முடிவுக்குத்தான் வந்திருந்தேன் அப்பா. உங்களிடம் எப்படிச் சொல்றதுன்னு தவித்துக் கொண்டிருந்தேன். நீங்க அந்தப் பிரச்னையைத் தீர்த்து வைச்சுட்டேள்!''

''டேய் சிவா...'' என்று ஏதோ சொல்லத் தொடங்கியவர், அவன் முகத்தைப் பார்த்து அடக்கிக் கொண்டார். 'எனக்குக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும் உத்தேசம் இல்லை என்று சொன்னாயே' என்று கேட்க நினைத்தவர் ''ரமேஷை வரச் சொல்லு...!'' என்றார்.

நன்றி பொங்கும் கண்களால் தந்தையைப் பார்த்துவிட்டு மெதுவாக நடந்து ரமேஷை அழைத்து வரச் சென்றான் சிவா.

''என்னன்னா இது...?'' என்று கேட்டுக் கொண்டே எழுந்து வந்த ராஜத்தை நிமிர்ந்து பார்த்தார் அவர்.

''சிவாவுக்குப் பொறுப்பில்லை என்று நான் சொன்னது சரியில்லை ராஜம். பொறுப்பு என்ற வார்த்தைக்கு அவன் கொண்டுள்ள அர்த்தம் வித்தியாசப் படுகிறது. அவ்வளவுதான். இப்போது என் மகனை நினைத்துப் பெருமைப் படுகிறேன்!'' என்று உற்சாகமாகக் கூறினார் அவர்.

# எழில் கொஞ்சும் தீபா
# ராதாஸ் ஆயுர்வேதிக் சோப்பையே விரும்புகிருள்

## அவளுடைய மேனி அழகாகவும்
## ஆரோக்கியமாகவும் இருக்க உதவுகிறது.

ராதாஸ் ஆயுர்வேதிக் சோப்

சருமத்தை·நறுமணத்துடன் ஆரோக்கியமாக
வைத்திருக்கும் வெட்டிவேர், கஸ்தூரி மஞ்சள்
கசோலம், ஓமம் மற்றும் சௌல்மூக்ரா
எண்ணெய் போன்ற அற்புதமான மூலிகை
களின் இன்றியமையாத எண்ணெய் கலந்த
இணையற்ற சோப்.




R



# காங்டோக்

“இது என்ன ஊர்? இது எங்கேயிருக்கிறது? இப்படியொரு ஊரைக் கேள்விப்பட்டதில்லையே?'' என்றெல்லாம் சாதாரணமாக யாரும் கேட்கக் கூடும்.

ஆம், பாரத நாட்டின் வட எல்லையைக் கடந்துள்ள திபெத் நாட்டின் மீது சீன ஆக்கிரமிப்புச் செய்து திபெத் மக்களின் தலைவர் தலாய் லாமா, தமது அரண்மனையை விட்டு, நாட்டை விட்டுப் பரிவாரங்களுடன் இரவோடு இரவாக ரகசியமாக ஓடி வந்து பாரத நாட்டில் சரணடைந்த போது இந்தக் காங்டோக் நகரம் உலகப் புகழ் பெற்றது. தலாய் லாமாவின் யாத்திரை சம்பந்தமான விவரங்களையும் இந்திய அரசாங்கத்தின் வரவேற்பு ஏற்



பாடுகளையும் பற்றி அகில உலகத்துப் பத்திரிகையாளர்கள் காங்டோக் நகரத்தில் குழுமியிருந்துதான் செய்திகள் அனுப்பி வந்தார்கள்.

கல்கத்தாவிலிருந்து கோஹாட்டிக்கு விமான மார்க்கமாகப் போனால் முக்கால் மணி நேரத்தில் போய் விடலாம். ரயில் மார்க்கமாகப் போனால் கிட்டத்தட்ட 36 மணி நேரம் ஆகும். அஸ்ஸாம் நாட்டையும் அம் மக்களையும் ஓரளவாகிலும் பார்க்க வேண்டும் என்றால் ரயில் பிரயாணமே சிறந்தது.

கோஹாட்டியிலிருந்து நேர் மேற்கே பத்து மணி நேரம் பிரயாணம் செய்தால், வங்க மாநிலத்தின் வட எல்லையிலுள்ள சிலுகிரியை அடையலாம். சிலுகிரியிலிருந்து சுமார் ஆறு மணி நேரம் வளைந்து வளைந்து உயரச் செல்லும் மலைப் பாதையில் பஸ்ஸில் பிரயாணம் செய்தால் காங்டோக்கை அடையலாம்.

பாரத நாட்டின் வட எல்லையில் சீனாவுக்கும் பாரதத்துக்கும் இடையில் இமயமலையின் மடியிலே, திபெத், ஸிக்கிம், பூடான், நேபாளம் ஆகிய நான்கு சுதந்திர நாடுகள், பிரிட்டிஷ் ஆட்சிக்காலம் வரை இந்தியாவுடன் நெருங்கிய சிநேகத்துடன் இருந்தன.

பாரதத்துடன் மிக நெருங்கிய நட்பும் பாசமும் கொண்டது ஸிக்கிம்.

ஜனநாயக ஆட்சியை நிறுவிக் கொண்டு இந்தியாவுடன் இணைந்து விட்டது. இப்போழுது சிக்கிம் இந்தியாவைச் சேர்ந்த மாநிலம்.

அன்று பிற்பகல் ஒரு மணிக்கு சிலுகிரியில் பஸ் ஏறினேன். பஸ் அந்த மலை அடுக்குகளின் இடையே கீழே பள்ளத்தாக்கின் சுழித்தும் சுழன்றும், துள்ளியும், குதித்தும், இரைந்தும், அமைதியாகவும் ஓடி வரும் தியஸ்தா நதியின் கரையோரமாகவே அந்த மலைச் சரிவில் சென்று கொண்டே யிருந்தது. வழியில் எவ்வித ஊரும் இருப்பதாகவே தெரியவில்லை. ஆயினும் ஆற்றின் ஆயிரக்கணக்கான சுழற்சி வேகங்கள், சிறந்த பரதநாட்டியப் பெண்மணி, முகத்தில் ஆயிரக்கணக்கான பாவங்களைப் பிரதிபலித்து, நம் உள்ளத்தை ஈடுபடுத்துவது போல், தியஸ்தாவும் உள்ளத்தை ஈர்த்து, அலுப்புத் தரக்கூடிய பிரயாணத்தை மிக சுவாரசியமாக்கி விட்டது!

வண்டியில் யாரோ, ''கமலா! கமலா!'' என்றார்கள். திரும்பிப் பார்த்தால் சாலையில் சாரி சாரியாக முதுகில் பிரும்மாண்டமான கூடையில் ஆயிரமாயிரம் ஆரஞ்சுப் பழங்களைச் சுமந்த வண்ணம் சிலர் மலை ஏறிக் கொண்டிருந்தனர். இந்த ஆரஞ்சுப் பழங்களைத் தான் அவர் ''கமலா'' என்று குறிப்பிட்டார். நம் சென்னையிலும்கூட இந்தப் பழங்களுக்கு ''கமலா'' என்றுதானே பெயர்!

மலைப்பாதை நெடுக இந்திய ராணுவத்தினர் சாலைகள் அமைத்து, பாலங்கள் கட்டிச்



சுறுசுறுப்பாக வேலை செய்து வருகின்றனர். அவர்களில் பெரும்பாலோர் தமிழர்களும் கேரளீயர்களும்.

வழியில் ''தியெஸ்தா பிரிட்ஜ்'' என்ற ஊர் வருகிறது. அந்த இடத்தில்தான் பாதை பிரிகிறது. இடது பக்கம் போனால் டார்ஜிலிங்குக்குப் போகலாம். வலது பக்கம் போனால் ஸிக்கிம் தலைநகரான காங்டோக்குக்குப் போகலாம்.

இந்தத் தியாஸ்தா பிரிட்ஜ் என்ற ஊரில் பஸ் ஐந்து நிமிடங்கள் நின்றது. மலைக ளிடையே இருந்த ஒரு சில வீடுகள்கொண்ட அந்தக் கிராமம் இயற்கைச் சூழ்நிலையில் ரம்மியமாக இருந்தது.

நான் காங்டோக்கை அடைந்த வேளை நன்றாக இருட்டி விட்டிருந்தது. ஆனால் பஸ்ஸை விட்டிறங்கி ஒரு ஹோட்டலைத் தேடிப் பிடிப்போம் என்று பத்து அடி எடுத்து வைத்துத் திரும்பிய போது மூச்சு முட்டும்படியான ஓர் அதிசயம் கண்ணில் பட்டது.

காங்டோக், 1704 மீட்டர் உயரத்தில் இருக்கிறது. அதாவது 5500 அடி உயரத்தி லிருக்கிறது. அவ்வளவு உயரத்தில் சென்னை மவுண்ட் ரோடு அளவு விசாலமான சாலை கிட்டத்தட்ட ஒரு கிலோமீட்டர் தூரம் சமதளத்தில் இருக்கப் பார்த்த போது என் வியப்பு சொல்லி முடியாது. சாலையின் இரு மருங்கிலும் கடைகளும் வீடுகளும். சாலையின் நடுவில்தான் கார்கள், லாரிகள், பஸ்கள் நின்றன. இந்த விசாலமான சாலையைப் பார்த்த போது நன்கு திட்டமிட்டு அமைக்கப் பட்ட ஊர்தான் என்பதைக் கண்டேன்.

முன் பக்கம்: அரண்மனை

இந்தப் பக்கம்: காஞ்சன் ஜங்கா, ஸிக்கிம் முதன் மந்திரி: காஸி லெண்டுப் டோர்ஜி.



''வைகறை துயிலெழு'' என்று சிறு வயதி லிருந்து 'படித்து' வந்திருக்கிறேன். ஆனால் அதைக் காங்டோக்கில்தான் கடைப்பிடித் தேன். நான் காங்டோக் போக இருக்கிறேன் என்று தெரிந்ததுமே கோஹாட்டி நண் பர்கள் ''ஸார் காலையில் 'காஞ்சன் ஜங்கா' வைப் பார்க்கத் தவறி விடப் போகிறீர்கள். அவசியம் பாருங்கள்'' என்று என்னிடம் சொல்லியிருந்தார்கள்.

டார்ஜிலிங்கிலிருந்து பார்த்தால் தான் காஞ்சன் ஜங்கா தெரியும் என்று கேள்விப்பட் டிருந்தேன். ஸிக்கிம் தலைநகரான காங் டோக்கிலிருந்து பார்த்தாலும் தெரியும் என்ற விவரம் இப்போதுதான் அறிந்தேன்.

அன்று காலை இரவு பிரிவதற்குள் எழுந்து விட்டேன். காஞ்சன் ஜங்கா நன்றாகத் தெரி யக்கூடிய இடம் பார்த்து நின்று கொண் டேன். தூர இருள் கவிந்த மலைத் தொட ரிடையே கண்களைப் பறிக்கும் பொன்னின் ஒளியுடன் மூன்று மலைமுடிக்குகளைப் பார்த்த போது உடல் முழுவதும் பக்தியோடு கூடிய மெய்சிலிர்ப்பு ஏற்பட்டது. எப்பொழுதோ படித்த பொன் வண்ணத்து அந்தாதியி லிருந்து. சிவபெருமானின் மேனியழகை வர்ணிக்கும் அந்த முதலடி என் உள்ளத் தில் எதிரொலித்து என் உதடுகள் முணு முணுத்தன.

''பொன்வண்ணம் எவ்வண்ணம்
அவ்வண்ணம் மேனி
பொலிந்திலங் கும்.''

காஞ்சனம் என்றாலே வட மொழியில் பொன் என்று பொருள். இமய மலையே சிவ

**எஸ்.வி.எஸ்**

# கிளர்ச்சியூட்டும் காட்டன்ஸ் அளிப்பதோ சென்ச்சுரி

**சூட்டிங்குகள்**—கற்பனை வளம் நிறைந்த டிசைன்களும் சென்ச்சுரி பருத்தியின் குளுமையான சுகமும் பரிபூரணமாக இணைந்தவை

**ஷர்ட்டிங்குகள்**-திகைக்க வைக்கும் கோடுகள் மனதை மயக்கும் கட்டங்கள், எண்ணற்ற நிறங்கள்-இவை எல்லாமே சேர்ந்து, சென்ச்சுரி பருத்தி எண்ணிலா வண்ணங்களில் குன்றாத ஒளி பெற்றுத் திகழ்கின்றது.

**புடவைகள்** பருத்தியின் சுகபோக இதம்-ஆம் உங்களுக்கு சென்ச்சுரி மட்டுமே இந்த சுகத்தை அளிக்க முடியும். சென்ச்சுரி புடவை உங்கள் எழில் உடலை ஒட்டித் தழுவ, கிளுகிளுப்பூட்டும் மகிழ்ச்சியிலே திளைக்கிறீர்கள். நெருப்பை எதிர்த்து உழைக்கும் அக்னியவிரோதக் புடவைகளும் உண்டு.

**ஆடை அணி வகைகள்** ஜீவன் ததும்பும் டிசைன்கள், கனிகடம் புரியும் வண்ணங்கள், சென்ச்சுரி பருத்தியின் மென்மையும் உணர்ச்சியைத் தொடும் சிறப்பும் உங்களை என்றும் மகிழ்விக்கும்.

**தி சென்ச்சுரி ஸ்பின்னிங் &**
**மான்யுபாக்சரிங் கோ. லிட்.,**
**பம்பாய் 400 025**



**சென்ச்சுரி**
**நூற்றுக்குநூறு**
**பருத்தித்**
**துணிமணிகள்.**

national-913-Tamil

பெருமானின் திருவுருவம் என்பது பாரத நாட்டு மரபு. ஆகவே, காஞ்சன ஜங்காவைப் பார்த்ததுமே சிவபெருமானை நேரில் கண்டது போன்ற பக்தி உணர்வு ஏற்பட்டது. என்னை அறியாமல் கைகள் குவிந்தன.

இப்படிப் பார்த்துக் கொண்டு நிற்கையி லேயே வெளிச்சம் அதிகரிக்கத் தொடங்கியது. காஞ்சனஜங்காவும் பொன்மேனி மாறி, வெள்ளி மேனியாகி விட்டது. இன்னும் சற்று நேரத்தில் மற்ற மலைத்தொடர்களிடையே காஞ்சன ஜங்கா பிரித்துக் காண முடியாதபடி கரைந்து விட்டது. மொத்தத்தில் காஞ்சன ஜங்காவைப் பார்த்தது வாழ்க்கையில் மறக்க முடியாததோர் அநுபவம்.

பிறகு காங்டோக் நகரை வலம் வரப் புறப்பட்டேன். ஏராளமான இந்திய ராணுவ லாரிகளும் டிரக்குகளும் சாலைகளில் நடமாடின. மலைப்பாங்கான பகுதியாதலால் சாலைகள் ஏறுவதும் இறங்குவதுமாக இருக்கின்றன. அந்தச் சாலைகளையும் பங்களாக்களையும் கண்டபோது, தமிழ்நாட்டுக் கூனூரில் இருப்பது போல்தான் தோன்றியது. ஓர் அருமையான ஹாஸ்டலில் வசதியோடு கூடிய பள்ளிக்கூடம் இருப்பதைப் பார்த்தேன். உள்ளே நுழைந்து தலைமை ஆசிரியரையும், மற்ற ஆசிரியர்களையும், மாணவர்களையும் பாட திட்டங்களையும், சித்திர நாடகம் முதலியவற்றில் மாணவ மாணவிகளுக்கு அளிக்கப்படும் பயிற்சிகளையும், விளையாட்டு மைதானத்தையும் பார்த்த போது உதகமண்டலம், கொடைக்கானல் போன்ற இடங்களில் இருப்பது போன்ற பப்ளிக் ஸ்கூலாகப் பரிணமிப்பதற்குரிய அத்தனை அம்சங்களும் இருக்கக் கண்டேன். ஆயினும் அந்தப் பள்ளியில் போதிய மாணவர்கள் இல்லை.

சிக்கிம் மகாராஜா லெப்சா இனத்தைச் சேர்ந்தவர். அவர் பௌத்த மதத்தைச் சேர்ந்தவர். என்றாலும் சோகியாலின் மனைவி ஓர் அமெரிக்க மாது. ஆனால் சிக்கிம்மின் பெருவாரி மக்கள் அண்டை நாடான நேபாளத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் பெரும்பான்மையோர் இந்துக்கள்.

மொத்தத்தில் பாரதத்தின் வட எல்லையி லுள்ள சிக்கிம் மாநிலத்தில் இயற்கை எழில் கொஞ்சுகிறது. இது பாரதத்தின் பாதுகாப்புக்கு மிக அவசியமான பிரதேசமும் ஆகும்.

# சிலம்புச் செல்வம்

ம.பொ.சி

"ஏவல் தெய்வத்து
எரிமுகம் திறந்தது''

என்னும் முதல் வரியைக் கொண்டு அழற்படு காதையைத் தொடங்குகிறார். ஆம்; கண்ணகி ஏவினாள்; அழல் தெய்வத்தின் எரிமுகம் திறந்தது!

மதுரை மாநகர் தீப்பற்றி எரியத் தொடங்கியதுமே, அதுவரை அந்நகரைக் காவல் புரிந்து வந்த தெய்வங்கள், பத்தினியின் சீற்றத்தைக் கண்டு பயந்து, கூடற்பதியை விட்டு விலகிச் சென்று விட்டனவாம்.

பாண்டியன் கோன்முறை பிறழாதிருந்த காலம் வரை நால் வருண பூதங்கள் அந்தப் பதியைக் காத்து வந்தனவாம். இப்போது, அந்த வருண பூதங்களும் மதுரையை விட்டு வெளியேறினவாம்.

அடிகள் அந்தண வருணம், அரச வருணம், வணிக வருணம், வேளாண் வருணம் ஆகிய நான்கு வருணங்களையும் நான்கு பூதங்களாகக் கற்பித்துக் கொண்டு, அவை நகரிலிருந்து வெளியேறி விட்டன என்கிறார். மன்னன் செங்கோலனாக இருக்கும் வரைதான் தருமங்கள் அவனைக் காக்கும். அரச நெறி பிறழ்ந்து விட்டால், தருமங்களும் கைவிட்டு விடும். திருக்குறளிலும்,

ஆபயன் குன்றும்
அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவான் எனின்''

என்று வள்ளுவர் கூறியிருக்கிறார்

சிலப்பதிகாரம் நாடகக் காப்பியமாதலால் மனிதரிலே நால் வருணத்தாருக்குரிய தருமங்களைப் ''பூதங்கள்'' என்னும் பெயரில் பாத்திரங்களாகக் கற்பனை செய்து, அவை நகரை விட்டு ஓடி விட்டன என்கிறார் ஆசிரியர். ஓடிப் போகிற பூதங்கள் சும்மா போகவில்லையாம். ''கூட்டறிக்கை'' விட்ட பின்னர் வெளியேறிப் போயினவாம்.

கோமுறை பிழைத்த
நாளில், இந்நகர்
தீமுறை உண்பதோர்
திறன் உண்டு என்பது
ஆம்முறை யாக
அறிந்தனம் ஆதலின்,
யாம்முறை போவது
இயல்பு அன்றோ?''

அரசன் செங்கோல் முறையிலிருந்து பிறழுங்கால், இந்த மதுரை மாநகரைத் தீயுண்ணும் என்பது எங்களுக்குத் தெரியுமே! அதனால், யாங்கள் இந்நகரை விட்டு வெளியேறுவது இயல்புதானே!'' என்பது வருண பூதங்கள் விடுத்த கூட்டு அறிக்கையின் பொருளாகும்.

மதுரை நகரம் முழுவதும் பரவிக் கிடந்த பசுக்களும் கன்றுகளும் நெருப்புக்குத் தப்பி, கண்ணகி தேவிக்கு அடைக்கலம் தந்த ஆயர் சேரியை அடைந்து, உயிர் பிழைத்தனவாம். ஆற்றல் மிக்க போர் யானைகளும் பெண்யானைகளும் விரைந்து செல்லும் திறனுடைய குதிரைக் கூட்டங்களும் நகரின் மதிலுக்குப் புறத்தே சென்று உயிர் பிழைத்தனவாம்.

''கறவையும் கன்றும்
கனல்எரி சேரா
அறவை ஆயர்
அகன்தெரு அடைந்தன
மறவெங் களிறும்,
மடப்பிடி நிரைகளும்,
விரைபரிக் குதிரையும்
புறமதிற் பெயர்ந்தன''

குழந்தைகளையும் வயது முதிர்ந்தோரையும் எரிக்க வேண்டா மென்றும் கண்ணகி கனல் தெய்வத்திற்குக் கட்டளை யிட்டிருந்தாள். அதனால், மதுரை நகரிலுள்ள இல்லக் கிழத்தியர், தொட்டிலிலும் கட்டிலுமிமாகத் தூங்கிக் கொண்டிருந்த தங்கள் குழந்தைகளை எழுப்பி, தங்கள் கைகளில் சுமந்து கொண்டு, மூத்தோரான பெண்டிர் முன்செல்ல, அவர்களைப் பின்பற்றிச் சென்றனராம்

திதலை அல்குல்
தேங்கமழ் குழலியர்
குதலைச் செவ்வாய்க்
குறுநடைப் புதல்வரொடு
பஞ்சிஆர் அமளியில்
துஞ்சுதுயில் எடுப்பி,
வால்நரைக் கூந்தல்
மகளிரொடு போத ''

பத்தினிப் பெண்டிரைத் தீண்ட வேண்டா மென்று பூம்புகார்ப் பத்தினி அக்கினி தேவனுக்கு ஆணையிட்டிருந்தாள் அல்லவா? அதனால்,

'' அறவோர்க் களித்தலும்
அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும்
தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலு''

மான அறங்களைக் கடைப்பிடித்து, கற்பு நெறியில் வாழ்க்கை நடத்தும் பத்தினியர் நிலையை இளங்கோ வருணிக்கிறார். அவர்களைத் தீக்கடவுள் தீண்டவில்லை என்று தகவல் தருகிறார். (தொடரும்)

(மயிலை இலக்கிய கூட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# தாயிடமிருந்து மகளுக்கு...




**ஒப்பில்லா ஒளிவீசும்
சலவை ரகசியம்–
உயர் விசேஷ
ஸன்லைட் திறம்**

அன்றாடம் துணிவெளுக்கும் சோப்புக்கு இருக்க வேண்டிய தகுதிகள் என்னென்ன? விடாத அழுக்கையும் விரட்டும் வலிமை. அதே சமயம் துணிகளைக் கெடுக்காத கனிவு. இரண்டும் இணைந்தது ஸன்லைட். தலைமுறை தலைமுறையாகப் பெண்குலம் அறியும்: சலவைக்குப் பேராதரவு தந்துவருவது அபரிமித ஸன்லைட் சக்தி... துணிகளுக்குத் தூய்மை ஒளி வழங்குவதிலே ஒப்பற்றது. அலசும் கைகளுக்கும் ஆடைகளுக்கும் ஸன்லைட் நல்லிதமானது. உங்கள் குடும்பத்திற்கு மிகச் சிறந்ததே உகந்தது— அதுவே ஸன்லைட்.

**ஸன்லைட்: பல்லாண்டு பல்லாண்டு பேராதரவு இலட்சோப லட்சம் மாதருக்கு**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-SUN.1-203 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு



# எழுச்சி

ஒரு புத்தெழுச்சி நம் நாட்டின் பெரும் பாகங்களில் பெருக்கெடுத்தோடுகிறது. பல பரந்த நிலப்பகுதிகளில் உயர் விளைச்சல் வகைகள், உரங்கள், பூச்சித்தடுப்பு மருந்துகள், விவசாய இயந்திரங்கள் போன்றவற்றைக் கையாண்டு விவசாயிகள் பயிர் விளைச்சலில் அநேக அரிய சாதனைகள் புரிந்து வெற்றி கண்டுள்ளனர்.

இது ஓர் ஏற்றமிகு எழுச்சி. இதனைப் போற்றிக்காக்க வேண்டும். நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் இதனைப் பரப்ப வேண்டும். இப்பசுமைப்புரட்சிக்கு உதவிய கருவிகளும் செய்முறைகளும் பல்லாயிரம் விவசாயிகளுக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும். அப்போதுதான் பெருக்கெடுத்தோடும் எழுச்சி நிரந்தரமான வளத்திற்கு வழி வகுக்கும்.

உலகில் மிகவும் விரும்பப்படும் டிராக்டரையும் விவசாய இயந்திரங்களையும் உற்பத்தி செய்யும் டாஃபி இப்பசுமைப் புரட்சியில் தனது பங்கு குறித்துப் பெருமையுறுவதோடு இந்திய விவசாயத்தை நவீனப்படுத்தும் மகத்தான பணியில் மேலும் உறுதியான பங்கேற்கக் காத்துக் கொண்டிருக்கிறது.

TAFE

டிராக்டர்ஸ் அண்டு ஃபார்ம் எக்விப்மெண்ட் லிமிடெட், மதராஸ்